# கல்கி

KALKI 22.9.96 ரூ. 3.00

மனம் நொந்து பேசுகிறார் கராத்தே வீரர் ஹுசைனி...



"வெறும் ஷோ காட்டினால்தான் மரியாதை!"

• ஸ்டாலின்

ஆயிரம் விளக்குத் தொகுதியில் உள்ள சீனிவாச சன்னதித் தெருவில் ஒரு கூட்டம். துணைச் சபாநாயகர் பரிதி இளம்வழுதி அந்தக் கூட்டத்தில் பேசும்போது, "இந்தத் தெருவை கிண்டலாக 'சாணிவாசத்' தெரு என்று சொல்வார்கள். அந்த அளவுக்கு மாட்டுச் சாணியும் குப்பைகளும் வழிந்தோடும் சாக்கடைகளுமாக இருந்தது. ஆனால் ஸ்டாலின் எம்.எல்.ஏ. ஆக வந்த பிறகு இந்தத் தெரு சுத்தப்படுத்தப்பட்டு விட்டது. இந்தத் தெருவைப் போலவே நகரமே சுத்தமாக



# 'மேயர்' ஸ்டாலின்?

வேண்டுமென்றால் ஸ்டாலின் மேயராக வேண்டும்..." என்றார்.

தலைமை விரும்புவதை பரிதி எடுத்துச் சொன்னாரா அல்லது, அவரது கருத்தைச் சொன்னாரா என்பது மர்மமாக இருந்தாலும், பரிதியின் பேச்சைத் தொடர்ந்து சென்னை மாவட்டக் கழக எம்.எல்.ஏக்களும் மாவட்டச் செயலாளர்களும் ஸ்டாலினுக்கு மேயர் ஸீட் கொடுக்க வேண்டும் என்று மனுவுக்கு மேல் மனு கொடுத்து கழகமும் அவருக்கு மேயர் பதவிக்குப் போட்டியிட வாய்ப்புக் கொடுத்து விட்டது.

தி.மு.க. அரசு மீதும், கலைஞர் மீதும் குறைகாணக் காத்துக் கொண்டிருந்த எதிர்க்கட்சிக்காரர்களுக்கு ஸ்டாலினின் போட்டி, வெறும் வாய்க்குக் கிடைத்த பான்பராக்! 'வாரிசு அரசியலை வளர்க்க கலைஞர் முயல்கிறார்' என்று குற்றச்சாட்டுக்கள். அதே சமயத்தில், முதல்வரின் மகனாக இருக்கும் ஒரே காரணத்திற்காக, அரசியலில் ஸ்டாலின் வளர்வதற்கு ஸ்பீட் பிரேக்கர் போடுவது எந்த விதத்தில் நியாயம்? - இப்படி இருவிதமான அபிப்பிராயங்கள்.

# வாரிசு அரசியலை வளர்க்கிறாரா கலைஞர்?



• நாஞ்சில் மனோகரன்



• கே.ஏ. கிருஷ்ணசாமி

"(கடந்த ஐந்து வருட காலத்தில்) தொலைந்து விட்ட அரசியல் கலாசாரத்தை மீட்கும் பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டிருக்கும், தி.மு.க., ஸ்டாலினை மேயர் தேர்தலில் நிறுத்தாமல் இருந்திருந்தால், பரம்பரை ஆட்சிக்குக் கலைஞர் வழிவகுக்கிறார் என்ற தோற்றத்தை தவிர்த்திருக்கலாம்" என்று ஒரு பேச்சு.

"மேயர் பதவி என்பது சத்தியமூர்த்தி, முத்தையா செட்டியார் போன்ற பெரிய தலைவர்கள் அலங்கரித்த பதவி. ஸ்டாலின் இன்னமும் இளைஞர்தான். நகரத் தந்தை என்பவர் அனுபவமும் முதிர்ச்சியும் பெற்றவராக இருக்க வேண்டும். அப்பா மாநிலத்தின் முதல்வர், அவரது மருமகன் மத்திய அமைச்சர்; மகன் மேயர். இது ஒரு குடும்பத்து ஆட்சியில்லையா? நேரு உயிரோடு இருந்தவரை இந்திரா காந்திக்கு எந்தப் பதவியையும் கொடுக்கவில்லை. அது போல இந்திரா அவர்கள் உயிரோடு இருந்தவரை ராஜீவ் காந்தி பதவிகளை அனுபவித்ததில்லை. தவிர, 1970களில் தி.மு.க. ஆட்சியின்போது நடந்த ஊழல் காரணமாகத்தான் மாநகராட்சி கலைக்கப்பட்டது. வன்முறை அரசியலுக்கு அடிக்கல் நாட்டியதும் அவர்கள்தான். ஆகவே அந்தக் கட்சியைச் சேர்ந்தவர் மேயராக வரக்கூடாது. இந்தக் காரணங்களால்தான் நாங்கள் சந்திரலேகாவைக் களத்தில் இறக்கியுள்ளோம். இது ஒரு acid test" என்று சொன்னார் தமிழக காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன்.

எதிர்க்கட்சிக்காரர்கள் என்னதான் சொன்னாலும், சென்னை மாவட்ட தி.மு.க. வினர் ஸ்டாலினுக்கு மேயர் ஸீட் கொடுக்கப்பட்டதற்கு எந்த எதிர்ப்பையும் தெரிவிக்கவில்லை. ஏன்? ஒரு முணுமுணுப்பு கூடக் கிடையாது.

"இன்றைக்கு, நேற்றைக்கு கட்சிக்கு வந்தவரா அவர்? எமர்ஜென்ஸி காலத்தில் அடி உதை பட்டு, மிசாவில் உள்ளே போய் வந்தவர். கழகத்தின் கீழ் நிலையிலிருந்து, படிப்படியாக, உட்கட்சித் தேர்தல்கள் மூலம் மேலே வந்தவர். ஆயிரம் விளக்குத் தொகுதியின் எம்.எல்.ஏவாக இருந்து, அந்த மக்கள் கொண்டாடும் அளவுக்குச் சிறப்பான பணிகளைச் செய்தவர்! அப்படிப்பட்டவர் மேயராக வருவதில் என்ன தவறு? அப்பா கட்சித் தலைவராகவும், முதல்வராகவும் இருப்பதால், மகனுடைய அரசியல் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுவது எந்தவிதத்தில் சரி?" என்று கேட்கிறார்கள் தி.மு.க. உடன்பிறப்புக்கள்.

"கலைஞருக்கும் ஸ்டாலினுக்கும் உள்ள உறவை தந்தை, தனயன் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கக் கூடாது. கட்சித் தலைவர் – கட்சிக்காக உழைக்கும் தொண்டன் என்ற அடிப்படையில்தான் இந்த உறவை எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று சொல்கிறார் தி.மு.க.வின் துணைப் பொதுச் செயலாளரும், வருவாய்த் துறை அமைச்சருமான நாஞ்சில் மனோகரன்.

"இந்த இளம் வயதில் பக்குவமும் முதிர்ச்சியும் பெற்ற இளைஞராக ஸ்டாலின் விளங்குகிறார் என்பது என் கணிப்பு. அமைச்சரவையில் ஸ்டாலினை சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூட நான் கலைஞரை கேட்டுக் கொண்டிருக்கிறேன். மக்கள் ஏதாவது சொல்வார்களே என்ற தயக்கமும் அச்ச உணர்வும் அவருக்கு இருப்பதை உணர்ந்தேன். அவருக்கிருந்த அச்சமெல்லாம், ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குப் பதவியைத் தருவது ஏற்புடையதாக இருக்குமா என்பதுதான். ஆனால், உலக நாடுகள் பலவற்றில் பார்க்கும்போது, தகுதி – திறமை அடிப்படையில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் வெவ்வேறு பொறுப்புக்களுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் ஸ்டாலின் சென்னை நகர மேயராக வருவதை நான் வரவேற்கிறேன். அவரது வெற்றி உறுதிசெய்யப்பட்ட ஒன்று" என்று நம்மிடம் சொன்னார் நாஞ்சிலார்.

• குமரி அனந்தன்



தி.மு.க.வைப் பொறுத்தவரை தேர்தலில் ஸீட் கொடுப்பதற்கு ஆட்சி மன்றக் குழுதான் முடிவு செய்ய வேண்டும். எம்.எல்.ஏ., எம்.பி., ஸீட்டுக்களின் எண்ணிக்கை குறைவானதால், ஆட்சி மன்றக் குழு கூடி, நேர்காணல் நடத்தி ஆட்களைத் தேர்ந்தெடுக்க முடிந்தது. ஆனால் உள்ளாட்சித் தேர்தலில் அதே முறையைக் கடைபிடித்தால், நேரம் போதாது. ஆதலால் பகுதி அல்லது ஒன்றியச் செயலாளர், மாவட்டச் செயலாளர், லோக்கல் எம்.எல்.ஏ. ஆகியோர் ஒன்றுகூடி சிபாரிசு செய்தவர்களுக்கு இந்தத் தேர்தலில் ஸீட் வழங்கப்படுகிறது. ஸ்டாலினைப் பொறுத்தமட்டில், சென்னை நகர தி.மு.க. எம்.எல்.ஏக்கள், வட,தென் சென்னை மாவட்டச் செயலாளர்கள் ஆகியோர் ஸ்ட்ராங்காக சிபாரிசு செய்திருக்கிறார்கள். தவிர, மேயர் தேர்தலில் போட்டியிட வேறு யாரும் முன்வரவில்லை. இந்தக் காரணங்களால் கட்சி மேலிடம் வேறு வழியின்றி ஸ்டாலினை வேட்பாளராக தேர்ந்தெடுத்திருக்கிறது.

ஆனால் இதில் இன்னோர் அம்சத்தையும் பார்க்க வேண்டும். கட்சித் தலைவரது மகனுக்கு அந்தப் பதவிக்குப் போட்டியிட விருப்பம் இருப்பதாக அறிந்த பின் வேறு யார் தைரியமாக முன்வருவார்கள்?

"ஆகவே, ஜனநாயக இயக்கமான தி.மு.க., குறைந்தபட்சம் மாநகராட்சிகளுக்கு மேயர் தேர்தலில் ஆட்களைத் தேர்ந்தெடுக்கவாவது மட்டும் ஆட்சி மன்றக் குழுவைக் கூட்டி நேர்காணல் நடத்தியிருக்கலாம்" என்பது அரசியல் நோக்கர்களின் கருத்து. அப்படிச் செய்திருந்தால் சென்னை மாநகரைப் போலவே, மதுரை, கோயமுத்தூர் மற்றும் வேறு பல மாநகராட்சி நகரத்திலுள்ள கழக உடன்பிறப்புக்களும் ஜனநாயக முறை பின்பற்றியது கண்டு சந்தோஷப்பட்டிருப்பார்கள்.

"ஸ்டாலினுக்கு இயல்பாகவே அரசியல் உள்ளுணர்வு உண்டு. கனிந்திருக்கிறார். பொதுநல நோக்கும் நன்கு தெரிகிறது. ஆனால், குடும்ப, மற்றும் வாரிசு அரசியல் என்றாலே, தமிழக மக்கள் அருவருப்பு அடைகிறார்கள். இந்த நிலையில் ஸ்டாலின் மிகுந்த எச்சரிக்கை உணர்வோடு செயல்பட வேண்டும்" என்று சொன்னார் கே. ஏ. கிருஷ்ணசாமி.

நடுநிலையாளர்கள் சொல்ல விரும்புவதும் இதுதான்.

— ப்ரியன்



"இடியாப்பத்துல தப்பித்தவறி ஒரு தலை முடி விழுந்திருக்கும்: அதுக்காக 'முடியாப்பம்' பிரமாதம்னு நீங்க பாராட்டுறது சரியில்லே சொல்லிட்டேன்!"

— சீர்காழி வி. ரேவதி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

"இப்பத்தானே சண்டை போட்டு ஓஞ்சது? மறுபடி உங்க அம்மாவும், உங்க மனைவியும் மீண்டும் ஆரம்பிச்சிட்டாங்களே?"

"இதைப் பக்கத்து வீட்டுக்காரங்க 'ஸ்பான்சர்' பண்றாங்க!"

— ஆர்.ஆர். பூபதி



●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

"குருவே! இந்த ஊர்க்காரனுகளுக்கு மரியாதையே தெரியாது போலிருக்கு!"

"ஏன் அப்பனே?"

"போஸ்டர் ஒட்டாதேன்னு ஆஸ்ரமத்து காம்பவுண்டுச் சுவரில் எழுதி வச்சிருந்தேன்... 'ஏண்டா ஒட்டக் கூடாது?'ன்னு அதுக்கு கீழேயே எவனோ எழுதி வச்சிருக்கான்!"

— உ. ராஜாஜி



ஷீஹான் ஹுஸைனியை ஒரு கராத்தே வீரராக எல்லாருக்கும் தெரியும். தமது மிரட்டும் போஸ்டர்களாலும் அவ்வப்போது பொது மேடைகளில் நிகழ்த்தும் சாகசச் செயல்களாலும் மக்களின் கவனத்தை எப்போதும் ஈர்த்துக் கொண்டிருப்பவர். சமீபத்தில் தாமே கதை எழுதி, இயக்கி, நடிக்கும் 'சிற்பி' என்னும் திரைப்படம் ஒன்றையும் தொடங்கி இருக்கிறார். 'ஹுஸைனிக்குக் கராத்தேவே தெரியாது' என்றும் 'அவர் செய்வ தெல்லாம் வெறும் ஸ்டண்ட்' என்றும் 'விளம்பரப் பிரியர்' என்றும் அவர் மீதுள்ள குற்றச்சாட்டுகள் பற்றியெல் லாம் கேட்டபோது மிகப் பொறுமையாக பதில் சொன்னார். 'இவ்வளவுதானா? என்னைப் பைத்தியக்காரன் என்றே ஒரு சாரார் முடிவு கட்டி, பிரசாரமும் செய்து வருகிறார்கள், தெரியுமா?' என்று புன்னகையுடன் கேட்டார். சுமார் இரண்டரை மணி நேரம் கல்கிக்கு அவர் அளித்த வித்தியாசமான பேட்டியிலிருந்து...



# வெறும் 'ஷோ'வுக்குத்தான் மரியாதை!

***"ஹுஸைனி, நீங்கள் ஒரு கராத்தே வீரரா? சாதனைப் புத்தகங்களில் இடம்பெறு வதில் ஆர்வமுள்ள, அசுர முயற்சிகளில் இறங்குபவரா? அல்லது நடிகரா? உங்களின் சரியான தொழில் என்ன?"***

"அடிப்படையில் நான் ஒரு கராத்தே வீரன்தான். பள்ளி நாட்களிலேயே மதுரையில் என் தந்தையிடம் வீர விளையாட்டுக்கள் கற்றுக் கொள்ளத் தொடங்கி விட்டேன். சிலம்பம், கம்பு சுழற்றுதல் இந்த மாதிரி. மதுரையில் என் அப்பா இத்தகைய வீர விளையாட்டுக்கள் சொல்லித் தருவதில் பெரிய ஆசானாக இருந்த வர். அப்போது தொடங்கிய என் பயிற்சி, பின் கராத்தேவுக்குத் திரும்பி, அதுவே என் வாழ்க்கையாக, தொழிலாக ஆகிவிட்டது."

*"பனிப்பாறைகளை உடைப்பது, மார்பின் மேல் காரை ஏற்றிச் செல்ல விடுவது, ஓடுகள் உடைப் பது போல சாகசங்கள்*



***செய்வதன் மூலம்தான் நீங்கள் பிரபலமாகியிருக்கிறீர்கள். கராத்தேவின் மூலம் சாதிக்கக்கூடியது இவைதானா?''***

"கராத்தே ஒரு உடல்சார்ந்த கலையே அல்ல. அது முழுக்க முழுக்க மன ஒருமைப்பாட்டை உருவாக்கும் ஓர் அற்புதக் கலை. புராண காலங்களில் முனிவர்கள், யோகிகள் எல்லாம் தியானம், யோகா மூலம் பெரிய சாதனைகள் பல புரிந்திருக்கிறார்கள். சாதனைகள் எதுவாயினும் அதற்கு மூலகாரணம் மனம்தான். மனம் ஒரு நிலைப்பட்டு, ஒரு கட்டத்தில் மனம் என்பதே இல்லாமல் போகும் நிலை உருவானால், அப்போது சாதனைகள் பிறக்கும். என்னைப் பொறுத்தவரை கராத்தேவும் தியானம் போல மனஒருமைப்பாட்டுக்கு வழிவகுக்கும் ஒரு கலைதான். இது ஒரு தற்காப்புக் கலையாகவே பரவலாக அறியப்பட்டாலும் அது மட்டுமே கராத்தேவின் பயன் அல்ல... விஷயத்துக்கு வருகிறேன். நீங்கள் குறிப்பிட்ட பனிப்பாறை உடைப்பது, மார்பின் மேல் காரை ஓட்ட விடுவது இவையெல்லாம் தீர சாதனைகள். இவற்றுக்கும் கராத்தேவுக்கும் சம்பந்தமில்லை. ஆனால் இத்தகைய சாதனைகள் புரிவதற்கேற்ற மனவலிமையை எனக்குக் கராத்தே தருகிறது. அவ்வளவுதான்."

***''கராத்தேதான் உங்கள் வாழ்க்கை, தொழில் என்கிறீர்கள். எனில் இந்த சாகசங்கள் எதற்கு? விளம்பரத்துக்காகவா?''***

''விளம்பரத்துக்காக அல்ல என்று பொய் சொல்ல மாட்டேன். இதைச் சற்று விளக்க வேண்டும். நான் முதல் முதலாக சென்னை வந்து, கராத்தே வகுப்புகள் நடத்த ஆரம்பித்து, நானும் உலக அளவில் நடைபெற்ற கராத்தே போட்டிகளில் கலந்து கொள்ளத் தொடங்கிய சமயம். அமெரிக்காவில் நடந்த உலக கராத்தே சாம்பியன்ஷிப் போட்டியில் கலந்து கொண்டு, தங்கம் வென்று திரும்பினேன். சந்தோஷத்தில் அனைத்துப் பத்திரிகைகளுக்கும் தொலைக்காட்சிக்கும் தகவல் தெரிவித்துவிட்டு, செய்தி வரும் என்று காத்திருந்தேன். நாலு வரி நியூஸ் கூட வரவில்லை! கராத்தேவில் உலக சாம்பியன் ஆவது என்ன சாதாரண காரியமா? நம்மை ஏன் அங்கீகரித்துப் பாராட்ட மாட்டேனென்கிறார்கள் என்று மிகவும் வருத்தப்பட்டேன். ஒரு கலைஞனுக்குப் பரிசை விட பாராட்டுதான் முதலில் இன்றியமையாதது. தோளைத் தட்டி, ஒரு சபாஷ் சொன்னால் கிடைக்கிற பலமே தனி! ஆனால் என்ன ஆயிற்று? என் சாதனையை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை, யாரும். அந்த நேரத்தில் ஜாகிர் உசேன் என்பவர் தலை முடியால் கட்டி ஒரு பஸ்ஸை இழுத்தார் என் பதை வரிந்து கட்டிக் கொண்டு பத்திரிகைகள் எழுதின. அது மட்டுமல்ல. உசேன் - உசைனி என்கிற பெயர் குழப்பத்தில் என்னிடம் வந்து, அவரது சாதனைக்காகப் பாராட்டுத் தெரிவித்

## மனம் நொந்து பேசுகிறார் ஹுஸைனி

தார்கள். வெறுத்துப் போனேன் நான்! நிஜமான சாதனைகளை விட, 'ஷோ'வுக்குத்தான் மரியாதை அதிகம் என்று புரிந்து கொண்டேன். அதிரடியாக, 140 லிட்டர் பெட்ரோல் ஊற்றிக் கொண்டு என்னையே எரித்துக் கொள்ளப் போவதாக அறிவித்தேன்!"

**"இதென்ன பைத்தியக்காரத்தனம் என்று உங்களுக்கே தோன்றவில்லையா?"**

"நிச்சயமாக இல்லை. நான்தான் சொன்னேனே, உலகின் கவனத்தை என்புறம் திருப்ப வேண்டும் என்கிற ஒரே இலக்குத்தான் அப்போது எனக்கு இருந்தது. சொன்னபடி குறிப்பிட்ட தினத்தில் 140 லிட்டர் பெட்ரோலை ஊற்றிக் கொண்டு தீக்குளித்தேன். தினத்தந்தியில் படங்களுடன் முழுப்பக்க செய்தி, எல்லா தின, வார, மாத இதழ்களிலும் பரபரப்புக் கட்டுரை... ஜப்பான், ஜெர்மனி தேசத்துப் பத்திரிகைகளிலெல்லாம் கூடப் படத்தோடு செய்தி வெளியிட்டார்கள். நான் மனத்துக்குள் சிரித்துக் கொண்டே இவற்றை ரசித்தேன்."

**"அது மிகப் பெரிய ரிஸ்க். ஒருவேளை நீங்கள் இறந்திருந்தால்?"**

"எப்படி இறப்பேன்? சத்தியமாக இறந்திருக்க மாட்டேன். நமக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் பல திறமைகளை வெளிக்கொணராமல் இருப்பதற்கு பயம்தான் தடையாக இருக்கிறது. 'can I?' என்கிற சொற்களில் தொக்கி நிற்கிற பயத்தைத் தூக்கி எறிந்து, அந்த 'I'யை முன்னால் போட்டு, 'I can' என முடித்துக்காட்ட உதவுவது கராத்தே. பயம் என்பது முற்றிலும் விலகிவிட்ட பின் நம்மால் எதையும் சாதிக்க முடியும்."

**"உங்கள் சாதனையை அசட்டு தைரியம் என்றும் குறிப்பிடலாமல்லவா? நீங்கள் குறிப்பிடுகிற முழு மனக்கட்டுப்பாடு, மன ஒருமை யெல்லாம் எப்போதும் எல்லாருக்கும் எப்படி சாத்தியமாகும்?"**

"உண்மை. அது பயிற்சியின் மூலம் வருவது. இருந்தாலும் புத்திசாலித்தனம் உடன் இருக்கிறதல்லவா? நான் ஒன்றும் எடுத்த எடுப்பில் பெட்ரோலை ஊற்றிக்கொண்டு, பற்றவைத்துக் கொள்ளவில்லையே? முதலில் மனித உடலின் அமைப்பு, வலிமை, தாங்கும் சக்தி இப்படியான 'பயாலஜி' விஷயங்களைக் கூர்ந்து படித்தேன். மருத்துவர்களிடம் கலந்து பேசினேன். பின் பெட்ரோலின் குண இயல்புகளை அறிந்து கொண்டேன். நான் ஒரே ஒரு லிட்டர் பெட்ரோலை ஊற்றிக் கொண்டு பற்றவைத்திருந்தால் நொடியில் சாம்பலாகியிருப்பேன். ஏன் 140 லிட்டர் ஊற்றிக் கொண்டேன் என்றால் அது என் புத்திசாலித்தனம். '140 லிட்டர் பெட்ரோலா?' என்று மற்றவர்கள் வாய்பிளப்பார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அத்தனை பெட்ரோலும் முழுக்க எரிந்த பிறகே தீ உடலைத் தொடும்! அந்தச் சில நிமிடங்களே என் சாகசத்துக்குப் போதும் என்று முடிவு செய்தேன்."



**"நீங்கள் உலக சாம்பியன் ஆனபோது கவனிக்காதவர்களை, கவனிக்க வைக்க இப்படியொரு சாகசம் செய்தீர்கள். சரி. ஆனால் அதன்பின் சாகசங்கள் மட்டுமே உங்கள் தொழில் என்பதாக ஆகிவிட்டது போல் தெரிகிறதே? சமீபத்தில் கூட ஒரு பொது மேடையில் பாம்புகளைக் கடிக்கவைத்து, 'ஷோ' காட்டினீர்கள்..."**

"மறுபடி சொல்கிறேன். இது என் தொழிலல்ல. நான் இத்தகைய சாகசங்களை அடியோடு வெறுக்கிறேன். விருப்பமே இல்லாமல் தான் செய்துகொண்டிருக்கிறேன்."

**"விருப்பமில்லாமல் ஏன் செய்ய வேண்டும்? 'பப்ளிசிட்டி' மட்டும்தான் காரணமாயிருக்க வேண்டும்."**

"உண்மை. எனக்கு விளம்பரம் வேண்டும். யாருக்கு விளம்பரம் வேண்டாம் என்று சொல்லும் மனப்பாங்கு இருக்கிறது? அவரவருக்கு அவரவர் திறமைக்கேற்ப புகழும் விளம்பரமும் வந்தடைய வேண்டும் என்கிற ஆசை இருக்கவே செய்கிறது. எனது இந்த சாகசங்களால் கிடைக்கிற புகழும் விளம்பரமும் எனது கராத்தே பள்ளிக்கு உதவியாக இருக்கிறது. நிறைய மாணவர்களைக் கொண்டு வந்து சேர்க்கிறது. இதில் என்ன தவறு இருக்கிறது?"

**"சரி. அந்தப் பாம்பு விஷயத்துக்கு வருவோம். பாம்புக்கு பயப்படாதவர்கள் யாருமில்லை. நீங்கள் நடத்திய நிகழ்ச்சியில் அந்தப் பாம்புகளுக்கு நிஜமாகவே விஷம் இருந்ததா?"**

"சத்தியம்! நான் எப்போதும் ஏமாற்ற மாட்டேன். அந்த நிகழ்ச்சி, 'கிங் குயின்ஜாக்' என்கிற படத் தொடக்க விழாவின்போது நடந்தது. என்னைக் கதாநாயகனாக வைத்து, இயக்குநர் ராஜேஷ்வர் தொடங்கிய படம் அது. பல காரணங்களால் தொடரவில்லை என்பது வேறு விஷயம். அந்தப் படத்தின் தொடக்க நாளன்று ஏதாவது சாகச நிகழ்ச்சி நடத்துங்கள்; வித்தியாசமாக இருக்கும் என்று ராஜேஷ்வர் சொன்னார். நான், 'வேண்டாம்' என்று எவ்வளவோ மறுத்துப் பார்த்தேன். கடைசியில் அவர் ஆசைக்காக இணங்க வேண்டியதாயிற்று. விஷ

"நேற்று நடைபெற்ற எங்கள் கட்சி செயற்குழுக் கூட்டத்தில் ஆறு மணி நேரம் கடுமையாக விவாதித்தும் ஒரு முடிவிற்கும் வர முடியாமல் ஒத்திவைத்து விட்டோம்!"

"எதைப் பற்றி விவாதித்தீர்கள்?"

"எங்கள் தலைவி தன் உடன்பிறவா சகோதரியை விட்டுப் பிரிந்தது உண்மையா? இல்லையா? என்று!"

– ஆ. பென்னியமின்.

முள்ள பாம்புகளைக் கடிக்க வைத்து, பின் சிகிச்சை பெறுவது என்று தீர்மானித்தேன். அந்தப் பாம்புகள் விஷமுள்ளவைதான் என்பதை மேடையிலேயே, ஒரு பாம்புடன் பழகும் கலைஞரைக் கொண்டு (பாம்புப் பண்ணையில் வேலை பார்ப்பவர்) நிரூபித்து, பின் கடிக்க வைத்தேன்."

***"அந்த அனுபவம் எப்படி இருந்தது?"***

"மிக பயங்கரமான அனுபவம் அது! சீற்றத்துடன் பாம்பு கடித்ததும் பரபரவென்று உள்ளுக்குள் ஏதோ ஓர் இயக்கம். உச்சந்தலையிலிருந்து பாதம் வரை தீயிட்டுக் கொளுத்தினாற் போல எரிச்சல்."

***"இறந்து விடுவோமோ என்ற லேசான பயம் கூட வரவில்லையா?"***

"இல்லை. ஒரு பாம்பு கடித்து யாரும் உடனே இறக்க மாட்டார்கள். அந்த நஞ்சு, உடலில் ஏறி, ரத்தத்தில் கலந்து ஓடி, மூளையை அடைந்து செயலிழக்கச் செய்யக் குறைந்தது பதினைந்து நிமிடங்கள் ஆகும். இந்த அறிவியல் விஷயத்தை நான் அறிவேன். ஆகவே துணிச்சலுடன்தான் இருந்தேன். அதுதான், பதினைந்து நிமிடங்களுக்குப் பின் சிகிச்சை தர மருத்துவர்கள் தயாராக இருக்கிறார்களே! விஷயம் என்னவென்றால், பாம்பு கடிப்பதால் இறப்பவரை விட, கடித்து விட்டதே என்கிற பயத்தால் இறப்பவர்கள்தான் அதிகம்."

***"உங்களுக்கு சினிமா ஆசை எப்படி வந்தது?"***

"எனக்கு எந்த ஆசைதான் இல்லை? சின்ன வயதில் ஓவியம் வரைய ஆசைப்பட்டேன். வரைந்து வரைந்து, ஓரளவு அதில் தேர்ச்சியும் பெற்றேன். ஓர் இசைக் கலைஞனாக விரும்பி விதவிதமான இசைத் தட்டுக்களைக் கேட்டுக் கொண்டே இருப்பேன். பிறகு சிற்பக் கலையில் ஆர்வம் வந்தது. தனபால் என்கிற சிற்பக் கலைஞர் மதுரையில் ஒரு சமயம் பதினைந்து நாள் சிற்பக் கலைப் பயிற்சி முகாம் நடத்தினார். அதில் கலந்து கொண்டேன். பிறகு நானே செதுக்க ஆரம்பித்து, முதல் முதலாக என் அம்மாவை நிற்கவைத்து ஒரு சிற்பம் உருவாக்கினேன். அதற்கு நேரமும் பொறுமையும் விடா முயற்சியும் அதிகமாகத் தேவை. எனது வேகம், ஏதாவது சாதிக்க வேண்டுமென்கிற வெறி – இதற்கு சிற்பக் கலை தோதுப்படவில்லை. சரி, நடிகனாகலாம் என்று முடிவு செய்து இயக்குநர் பாலசந்தரை சந்தித்தேன். அவரிடம் கூட எடுத்தவுடனே நடிக்க வாய்ப்பு கேட்கவில்லை. 'சார் நான் ஒரு சிற்பி. உங்களை சிற்பமாகச் செதுக்க விருப்பம். வாய்ப்புத் தாருங்கள்' என்றேன். முதலில் மறுத்தாலும் பின் ஒப்புக் கொண்டார். சுமார் இருபது நாட்கள் அவர் வீட்டுக்கே சென்று அவரை உட்கார வைத்து சிற்பமாகச் செய்து தந்தேன். அதுதான், நான் அவரைக் கவர்ந்த விதம். அதன்பின் நடிக்க வாய்ப்புக் கேட்டேன். 'புன்னகை மன்னன்' படத்தில் ஓர் இலங்கைத் தீவிரவாதி வேடம் தந்தார். அருமையான பாத்திரம் அது. நிறைய காட்சிகளில் நடிக்கிற சந்தர்ப்பம். ஆனால் கடைசியில் என்ன ஆயிற்று? எல்லாம் எடிட்டிங்கில் போய்விட, படத்தில் நான் வரும் காட்சி சில மணித்துளிகளே இருந்தன. வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்? தொடர்ந்து 'உன்னைச் சொல்லிக் குற்றமில்லை', 'வேலைக்காரன்', 'பறவைகள் பலவிதம்' எனச் சில படங்களில் சிறிய வில்லன் வேடங்கள். நான் போக விரும்பிய உயரத்துக்குச் சம்பந்தமில்லாத வேடங்கள். 'இனி இதுபோல் குட்டி வேடங்களில் நடிப்பதில்லை; நடித்தால் இனி கதாநாயகனாகத்தான் நடிப்பது' என்று முடிவு செய்தேன். அர்ஜுன் கூட, 'ஜெய்ஹிந்த்' படத்தில் ஒரு சின்ன வேடத்தில் நடிக்கக் கூப்பிட்டார். நான் முடிவு எடுத்தபின் பின்வாங்குவதில்லை என்பதால் அன்புடன் மறுத்து விட்டேன். இப்போது என் விருப்பப்படி 'சிற்பி' படம் செய்கிறேன்."

***"சினிமாவில் உங்கள் லட்சியம்தான் என்ன? பெரிய ஹீரோ ஆவதா?"***

"இல்லை. ஸ்பீல்பெர்க் மாதிரி ஒரு படம் நானே எடுப்பது! அதற்கான விஷயமெல்லாம் தயார். உலக அளவில் அந்தப் படம் பேசப்படும். ஆஸ்கார் பெறுவது உறுதி. மனிதன் நினைத்தால் மரணத்தை வெல்லலாம். இது கதையல்ல. சத்தியம். சாத்தியம்! இந்தத் தத்துவத்தை நான் நம்புகிறேன். Theory of Immortality என்பது பெரிய விஷயம். இது பற்றி உலக அளவில் ஆராய்ச்சியெல்லாம் நடக்கிறது. ஆத்மா அழிவில்லாதது என்று ஹிந்து மதம் சொல்கிறதே, அதுதான். ஆத்மா என்பது என்ன என்பது பற்றியெல்லாம் நாம் போக வேண்டாம். மனிதன் என்பவன் யார்? பல தகவல்கள், ஞாபகங்களின் கலவை. நம் நினைவு, ஞாபகங்கள், நாம் சேகரித்த தகவல்கள் இவற்றைக் கொண்டுதானே நாம் வாழ்கிறோம்? நாம் இறந்தால் இந்த நினைவுகள், சேகரித்த தகவல்கள் எல்லாமும் அழிந்து விடுகின்றன. ஆனால் அவற்றை அழியாமல் அப்படியே எடுத்து வேறொரு ஜீவனுக்குள்



''வக்கீல் பெயருடன் பி.ஏ.பி.எல்லுக்குப் பின்னால் ஏ.பி.எஸ். என்று போட்டிருக்கி றாராமே அப்படின்னா என்னங்க?''

''அதுவா! 'ஆண்ட்டிசிபேட்டரி பெயில் ஸ்பெஷலிஸ்ட்' என்று அர்த்தம்! அவர்கள் காட்டில்தானே இப்போது மழை!''

– வடவள்ளி ராமசுப்ரமணியன்.

---

செலுத்தி, அவற்றுக்கு மரணத்திலிருந்து விடு தலை தரலாம்! இதுதான் என் நம்பிக்கை. என் படம் இதைப் பற்றியதாக இருக்கும்."

*"சிற்பி படம் இதுதானா?"*

"இல்லையில்லை. அது என் இறுதி லட்சி யம். இந்தப் படம் என் இலக்கை நோக்கி, நான் எடுத்து வைக்கும் முதல் அடி."

***"சிக்கலான, விவாதத்துக்குரிய ஒரு தியரி பற்றிப் பேசுகிறீர்கள். சயன்ஸ் ஃபிக்ஷன் போல இருக்கிறது. ஆனால் நிஜம், சாத்தியம் என்கிறீர்கள். இது பற்றி வேறு யாருடனாவது விவாதித்திருக்கிறீர்களா?"***

"நிறைய. ஹூஸைனி ஒரு பைத்தியம் என்று என் காதுபடவே பேசுகிறவர்கள் இருக்கிறார் கள். ஆனால் அது பற்றி நான் கவலைப்படு வதில்லை. எனக்கென ஒரு சிறிய நண்பர்கள் குழு இருக்கிறது. மருத்துவர்கள், அறிஞர்கள் அதில் இருக்கிறார்கள். இது குறித்து ஆராய்ந்து கொண்டிருக்கிறோம்."

***"ஆராய்ச்சி விஷயம் என்கிறீர்கள். இதை எப்படி சினிமாவுக்கான சப்ஜெக்டாகவும் சொல்கிறீர்கள்?"***

"சினிமா என்பது என்ன? இன்றைய மிகச் சக்திவாய்ந்த தகவல் தொடர்பு சாதனம். அவ் வளவுதானே? புத்தகம் மூலமாகவோ, பத்திரிகை கள் மூலமாகவோ ஒரு செய்தி களை அடைவதை விட சினிமா மூலம் அதிகம் சென் றடைகிறது என்பதை மறுக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்."

***"Theory of immortality என்றெல்லாம் பேசு கிறீர்கள். ஆனால் உங்கள் 'சிற்பி' படத்தை அறிமுகப்படுத்தும்போது, ஆசைத்தம்பி சுட்டு வீழ்த்தப்பட்ட காட்சி போல எடுக் கப்படுகிறது; நிஜ குண்டால் சுடப்பட்டு காட்சி எடுக்கப்படவிருக்கிறது என்று அசல் சாவாத்தனமாகவே செய்கிறீர்கள். ஏன் இந்த முரண்பாடு?"***

"முரண்பாடு ஒன்றுமில்லை. தமிழ் சினிமா வில் கால் ஊன்ற என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ, அதைத்தான் செய்கிறேன்."

***"நிஜ குண்டால் சுடுவதெல்லாம் சட்டப் படி தவறு என்பது உங்களுக்குத் தெரி யாதா?"***

"தெரியுமே? அதனால்தான் அந்தக் காட் சியை நம் நாட்டில் எடுக்கவில்லை."

***"இதுவும் ஒருவித சட்ட ஏய்ப்புதானே?"***

"நீங்கள் ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்? நிஜ குண்டால் சுட்டால் கூட உடனே நான் இறந்து விட மாட்டேன். பொறுப்பு முழுவதும் என்னு டையதுதானே என்று எவ்வளவோ கேட்டுப் பார்த்தேன். அப்படியும் அனுமதி தர மறுத்து விட்டார்கள். என்ன செய்வது? நான் இறந்தால் அது குற்றம்தான். இறக்க மாட்டேன் என்று உறுதியாகச் சொன்ன பிறகும் நம்ப மறுத்தால் நான் என்ன செய்வது? என்னைப் பொறுத்த வரை பெட்ரோல் ஊற்றிக் கொண்டது, மார் பில் கார் ஏற்றிக் கொண்டது போலத்தான் இதுவும்."

***"உங்கள் குடும்பம் பற்றிச் சொல்லுங்கள். உங்கள் பெற்றோருக்கு, மனைவிக்கு, உங்க ளின் இத்தகைய நடவடிக்கைகளில் சம் மதமா?"***

"இல்லைதான். ஊருக்குப் போனால் என் அம்மா, 'ஏண்டா உனக்கு இந்த வேண்டாத வேலை?' என்று அழுவார்கள். என் தங்கைக் கும் இதெல்லாம் பிடிக்காது."

***"உங்கள் மனைவி?"***

(ஒரு நீண்ட மௌனத்துக்குப் பின்) "என் சாகசங்கள், அவளுக்கு அச்சமூட்டுகின்றன. 'விட்டு விடுங்கள், விட்டு விடுங்கள்' என்று எத் தனையோ தரம் சொல்லியும் நான் கேட்காத தால் என்னை விட்டே போய் விட்டாள். இப் போது கேரளாவில் இருக்கிறாள். மைக்ரோ பயாலஜியில் ஆராய்ச்சி செய்து கொண் டிருக்கிறாள்... இத்தனைக்கும் எங்களுடையது காதல் திருமணம்."

***"அப்படியா?"***

"ஆம். அவள் பெயர் மலர்விழி. அவள் ஓர் இந்துப் பெண். நான் ஒரு முஸ்லிம் என்ற போதும் எனக்காக அவளை மதம் மாறவெல் லாம் சொல்லவில்லை. அவள்பாட்டுக்குக் கோவிலுக்குப் போவாள். பூ வைத்துக் கொள் வாள். பொட்டிட்டுக் கொள்வாள். மத ரீதியில் எங்களுக்குள் எப்போதும் சிறு பிரச்னை கூட வந்ததில்லை. மனரீதியில்தான் ஒத்துப் போக முடியவில்லை."

***"நீங்கள் ஏன் உங்கள் மனைவிக்காக விட் டுக் கொடுக்கக் கூடாது?"***

"என் லட்சியத்தை விட்டுக் கொடுத்தால், நான் இறந்து விடுவேன். அது உறுதி."

சந்திப்பு : **ஔரங்கசீப்**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **சாய்வர்ஷா**

பிரமிப்பூட்டும்
கலைப்படைப்பாகத்
தயாராகிறது...

# கல்கி
# தீபாவளி மலர் '96

வண்ணப்படம் : திலீப் பானர்ஜி

# “இந்த ஏக்கம் தீராது!”

## மனசுல இருந்தது; கொட்டிட்டேன்!

என் தந்தை இளம்பரிதி. அவர்கள் தி.மு.க.வின் தொடக்ககாலம் முதற்கொண்டு கட்சியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர்களில் ஒருவர். ஆவேசமாக மட்டுமல்ல; ஆற்றொழுக்கு நடையில், நகைச்சுவையாகப் பேசுவதிலும் வல்லவர் அவர். ‘இன்று சென்னை மாநகரம் கழகத்தின் கோட்டையாக இருக்கிறதென்றால் அதற்கான அடித்தளம் போட்டவர்களில் உன் அப்பாவும் ஒருவர்’ என்று கழகத்தின் மூத்த உறுப்பினர்கள் என்னிடம் சொல்வதுண்டு.

சென்னை மாவட்டக் கழகச் செயலாளராக இருந்த அவருக்கு நினைப்பு, பேச்சு எல்லாமே கட்சிதான்.

நாங்கள் மூன்று சகோதரர்கள்; மூன்று சகோதரிகள். எங்கள் படிப்பு, தேவைகளைப் பற்றி என்றுமே அவர் கண்டுகொண்டது கிடையாது. சதா கட்சி வேலைதான். விவரம் தெரிந்த சிறுவனாக நான் வளர்ந்த பின்னர், நண்பர்களோடு அப்பா செய்யும் அரசியல் வாதங்களைக் கேட்பேன்.

இதைப் பார்த்து விட்டால், “டேய்... போய் படிக்கிற வேலையைப் பாருடா” என்று துரத்தி விடுவார்.

ஆனால் எனக்குள் வளர்ந்து வந்த அரசியல் ஆர்வத்திற்கு அவரால் தடைபோட முடியவில்லை.

ஸ்கூல் பைனல் முடித்த நிலையில், “அப்பா நீங்க பேசற கூட்டங்களுக்கு என்னையும் அழைத்துப் போங்களேன்” என்று ஒருமுறை கேட்டதற்கு, “நன்றாகப் படித்து, வாழ்க்கையில் முன்னேறப் பார்” என்று விரட்டி விட்டார்.

ஆனால், நான் கழகத்தின் பொதுக் கூட்டங்கள், குறிப்பாக, தலைவர் கலைஞரின் கூட்டங்கள் சென்னையில் எங்கு நடந்தாலும் அங்கு சென்று கேட்டு விட்டு வருவேன். இதை அரசல்புரசலாகத் தெரிந்து கொண்ட அப்பா, பின்னர் தாம் பேசும் கூட்டங்களுக்கும் என்னை அழைத்துச் செல்ல ஆரம்பித்தார். ஒரு கூட்டத்தில் அவருடைய உதவியாளர் போலவே ஆகிவிட்டேன்.

ஒருமுறை வில்லிவாக்கத்தில் ஒரு கூட்டம். மேடையில் அப்பா. அந்த வட்டச் செயலாளரிடம், “நானும் பேசுகிறேன்” என்று ஏதோ தைரியத்தில் சொல்லி விட்டேன். அவரும் ‘பரிதியின் மகன் இளம்வழுதி பேசுவார்’ என்று அறிவித்து விட்டார்.

நடுக்கத்துடன் மேடை ஏறினேன். அப்பாவின் காலைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டு, மைக்கைப் பிடித்தேன்.

ஒரு குட்டிக் கதை, தமாஷ், கருத்து என்று பத்து நிமிடம் பேசி முடித்தேன். அடுத்து அப்பா பேச்சு.

“என் மகன் இங்கே பேசினான். பரவாயில்லை. அவன் இப்படி அழகாகப்



“தலைவரோட சிலையை நடுரோட்ல அமைச்சா ட்ராபிக் பிரச்னையாகும்னு சொன்னாங்க!”

“அப்புறம்?”

“தலைவரோட சிலைக்குப் பக்கத்துல ட்ராபிக் கான்ஸ்டபிளோட சிலையையும் அமைச்சிட்டோம்!”

– கொங்கணாபுரம் வே. செந்தில்



பேசுவான் என்று நானே எதிர்பார்க்கலை; வாழ்க வளர்க" என்று முன்னுரையாகப் பேசி, தொடர்ந்தார் அவர்.

அதற்குப் பிறகு என் அரசியல் ஆர்வத்திற்குத் தீனி போடும் வகையில் எனது பல சந்தேகங்களுக்கு விளக்கமளிப்பார். 1985ல் பெரம்பூரில் சட்டமன்ற வேட்பாளராகப் போட்டியிட்ட போது, எனக்காகப் பிரசாரம் செய்தார்.

அதன்பின் அவருக்கு உடல்நலம் ஒரு பிரச்னையாகவே இருந்தது.

**1991–96** காலகட்டம் என் அரசியல் வாழ்க்கையில் முக்கியமானது. கிட்டத்தட்ட ஐந்து வருட காலம் தன்னந்தனியாக, அ.தி.மு.க.வின் அராஜகங்கள், ஊழல்களை சட்டமன்றத்தில் எடுத்து வைக்கும் வாய்ப்பு கிடைத்தது. டி.வி., வானொலி, பத்திரிகைகள் ஆகியவற்றில் என் பெயர் பலமாக அடிபட்டு தமிழகத்தின் மூலைமுடுக்குகளில் கூட நான் அறிமுகமானேன். 'சட்டமன்றக் கதாநாயகன்' என்ற அடைமொழி போட்டு போஸ்டர் அடிக்க, தமிழகம் முழுவதும் நூற்றுக்கணக்கான பொதுக் கூட்டங்கள் பேசினேன்.

அப்பாவின் குரல் 'படி, படி' என்று என் மனசுக்குள் ஒலித்துக் கொண்டே இருந்ததால், தனிப்பட்ட முறையில் கல்வித் தகுதியையும் வளர்த்துக் கொண்டேன். ஆனால் இவை எதுவும் என் அப்பாவிற்குத் தெரியாது. காரணம் தெரிந்து கொள்ள முடியாத 'கோமா' நிலையில் அவர் இருந்தார். நினைவு திரும்பும் சில நேரங்களிலும் நாட்டு நடப்பைப் புரிந்து கொள்ள முடியாத நிலை!

1996 தேர்தலில் வென்ற என்னை, துணைச்சபாநாயகர் ஆக்கினார் தலைவர் கலைஞர்.

நான் பதவியேற்கும்போது சட்டமன்ற காலரியில் அம்மா மற்றும் குடும்பத்தினர். என்னை அறியாமலேயே கண்களில் கண்ணீர். தொண்டையில் துக்கப் பந்து. காரணம் அப்பா!

ஆம்! தேர்தலுக்கு முன்பே காலமாகி விட்டார் அவர்!

"எனக்கு தாய்க்குத் தாயாகவும், தந்தைக் குத் தந்தையாகவும் தலைவர் கலைஞர் இருக்கிறார்கள்" என்று நான் அன்று பேசினேன்.

மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்து, குடிசையில் வளர்ந்து, நகராட்சிப் பள்ளியில் படித்த என் முன்னேற்றத்தைக் காண அப்பா இல்லையே என்ற ஏக்கம், இனி தீராத ஒன்றாகவே ஆகிவிட்டது!

சந்திப்பு : ப்ரியன்
படம் : பேஜர் கே. மூர்த்தி

**— துணை சபாநாயகர் பரிதி. இளம்வழுதி**

**களத்தில் கல்கி :**



# நெடுஞ்சாலையில் ஒரு நெருக்கடி; தீர்வு எப்போது?

ஆட்சி செய்பவர்கள் சரியில்லையென்றால், அதிமுக்கியமான திட்டங்கள் கூடத் தொங்கலில்தான் விடப்படும் என்பதற்குச் சரியான உதாரணம்தான், இன்னமும் தொங்கிக் கொண்டிருக்கும் காரனோடைப் பாலம்.

சென்னையிலிருந்து சுமார் முப்பது கி.மீ. தொலைவிலிருக்கும் இந்தப் பாலத்தின் நடுப் பகுதி (55மீட்டர்), கடந்த 93- நவம்பரில் பெய்த கன மழையில் அடித்துச் செல்லப்பட்டு விட்டதால், பாலம் இரண்டு தனித்தனி பகுதிகளாகப் பிரிந்து விட்டது. இவற்றை இணைக்கும் உடனடி முயற்சியாகத் தாற்காலிகப் பாலம் ஒன்று அமைக்கப்பட்டது.

ஐம்பத்தைந்து மீட்டர் நீளமுள்ள இந்தத் தாற்காலிகத் தொங்கு பாலத்தின் அகலம் வெறும் பதினான்கு அடிகள்தான் என்பதால், ஒருவழிப் போக்குவரத்தாக்கி, வாகனங்களை மாற்றி மாற்றி விட்டுக் கொண்டிருக்கிறார்கள். எப்போதிருந்து? கடந்த 94-லிருந்து!

இதுவொரு பெரிய விஷயமா என்பவர்களுக்கு ஒரு வார்த்தை.. இந்தப் பாலம் அமைந்திருப்பது, ஏதோவொரு குக்கிராமத்திற்குச் செல்லுகிற பாதையில் அல்ல. சென்னையிலிருந்து கல்கத்தா செல்கிற தேசிய நெடுஞ்சாலை (N.H.5) யில் அமைந்திருக்கிறது இந்தப் பாலம்! ஒருநாளைக்கு ஆயிரக்கணக்கான வாகனங்கள் செல்லுகிற பாலம் இது.

இதனால் போக்குவரத்து ஸ்தம்பித்து விடாதா?

"அதை ஏன் கேட்கிறீர்கள்? அதுவும் இந்த ஆடி மாதம் வந்து விட்டாலே படா பேஜார்தான். பக்கத்திலிருக்கும் பெரிய பாளையத்தம்மன் கோவிலுக்கு நிறைய பேர் மாட்டு வண்டி கட்டிக் கொண்டு செல்வார்கள். மாட்டு வண்டிகள் வேகமாகச் செல்ல முடியாதே! அதனால் டிராஃபிக் ஜாம் ஆகும் பாருங்கள்...

அரைமணி, ஒரு மணி அல்ல, நான்கைந்து மணி நேரத்துக்கு ஜாம் ஆகிவிடும்!" என்றார் அங்கே போக்குவரத்தை ஒழுங்குபடுத்த நியமிக்கப்பட்டிருக்கும் தேசிய நெடுஞ்சாலைத் துறைப் பணியாளர்களில் ஒருவர்.

மற்ற நாட்களில்?

"சாயந்திரம் நான்கு மணிக்கு வந்து பாருங்கள்... தினசரி அவதிதான் இது."

**தா**ற்காலிகமாக அமைக்கப்பட்டிருக்கும் தொங்கு பாலம் முழுக்க முழுக்க இரும்



• தினமும் டிராஃபிக் ஜாம்!

பாலேயே அமைக்கப்பட்டுள்ளது. இரும்புச் சட்டங்கள், பலகைகள் என்று போட்டு நட்டுகளாலும் போல்ட்களாலும் இணைத்திருக்கிறார்கள். அதனால் பாலத்தின் மேல் ஒரு சாதாரண வாகனம் போனால் கூட ஏதோ பயங்கர வெடிகள் வெடிக்கிற மாதிரியான சப்தம் எழுந்து, சுற்றுவட்டாரத்தையே கதிகலங்க வைக்கிறது. அதோடு, அவ்வப்போது அந்த நட்டுகள் தளர்ந்து போவதால், அதைச் சரிசெய்வதற்கென்று, ஊழியர்கள் வேலை செய்கிறபோதும் போக்குவரத்து ஸ்தம்பித்துப் போய் விடுகிறது.

இதனால் ஜனங்களுக்கு எத்தனை இடைஞ்சல் என்று யோசிக்கவில்லை, கடந்த ஆட்சியினர். போக்குவரத்தை மாற்றி மாற்றி ஒருவழிப்பாதையாக அனுப்ப வேண்டியிருப்பதால், அதற்காக 24 மணி நேரமும் ஆட்களை நியமிக்க வேண்டுமே!

அதில் கட்சிக்காரர்களுக்கு வேலை கொடுக்கலாமே என்கிற ரீதியில் யோசித்ததாலோ என்னவோ, அந்தப் பணிகளுக்காகச் சுமார் பதினைந்து இருபது கட்சிக்காரர்களையே நியமித்து விட்டார்கள்!

"அதையேன் சார் கேக்கறே... நடுவுல கட்டியிருக்கற இரும்புப் பாலம் டெம்ப்ரவரிதானே... அத்தால அதில பதினாறு டன் எடைக்கு மேல வெய்ட் ஏத்திக்கிட்டு வர்ற லாரிங்கள்லாம் போவக் கூடாதுன்னு வெச்சிருக்காங்க. எல்லாமே அப்படி கரெக்டா வர முடியுமா? சிலதுங்க, பதினாறு டன்னுக்கு மேல பத்துக் கிலோ, இருபது கிலோவாவது அதிக எடையோடதான் வரும். கட்சிக்காரங்க அந்த லாரியோட எடை பில்லை வாங்கிப் பார்ப்பாங்க. அதுல சரியான எடை இருக்குமே. புடிச்சிக்குவாங்க. சுத்து வழியாத்தான்

போவணும்; இதுல போவக்கூடாதுன்னு வாங்க. சுத்து வழின்னா, ஒரு அவருக்கு மேல போவ வேண்டியிருக்குமே. அத்தால கட்சிக் காரங்களை 'கவனிச்சிடு'வாங்க. நல்ல வேட்டைதான் அவுங்களுக்கு..!" என்றார் பாலத்தின் அருகே பெட்டிக்கடை வைத்திருக்கும் ஒருவர்.

நல்லவேளையாக அப்படி அதிக எடையுடன் சென்ற வாகனங்களால் இதுவரை பாலத்துக்கு எந்தவிதமான ஆபத்தும் ஏற்படவில்லை. அதைவிட நல்லவேளையாக, இப்போது ஆட்சிக்கு வந்திருக்கும் தி.மு.கவினர், அந்த 'வசூல்' வேட்டையைத் தொடரவில்லை; ஏற்கெனவே நியமிக்கப்பட்டிருந்த அ.தி.மு.க. வினரையெல்லாம் வீட்டுக்கு அனுப்பிவிட்டு, அந்த இடங்களில் தேசிய நெடுஞ்சாலைத் துறைப் பணியாளர்களையே வேலைக்கு அமர்த்தியிருக்கிறார்கள்.

இவையெல்லாம் ஒருபக்கம் இருக்கட்டும். இத்தனை முக்கியமான ஒரு தேசிய நெடுஞ்சாலையில் புதிய பாலம் ஒன்று கட்டுவதில் ஏன் இத்தனை தாமதம்?

"புதிய பாலமொன்று ஒன்பது கோடி செலவில் கட்டப்படும்!" என்று அப்போதைய பொதுப்பணித்துறை அமைச்சர் 94-லேயே சட்டசபையில் அறிவித்தார். அதற்கு மத்திய அரசும் ஒப்புக் கொண்டது என்றாலும் அந்தத் திட்டம் அங்கீகரிக்கப்பட இன்னும் ஓராண்டு ஆகும் என்றார். பிறகு டெண்டர்கள் கோரப்பட்டு முடிவு செய்கிற நேரத்தில் பொதுத் தேர்தல் வந்து விட்டதால் அந்தப் பணிகள் அப்படியே நின்றுபோய் விட்டன.

இப்போதைய தி.மு.க. அரசு பழைய டெண்டர்களில் 'கமிஷன்கள்' புகுந்து விளையாடியிருப்பதாகக் கூறி, புதிய டெண்டர்களைக் கோரி வேலைகளைத் துவங்கியிருக்கிறது.

இந்தத் திட்டத்திற்கு மத்திய அரசின் ஒப்புதலும் ஒத்துழைப்பும் தேவை என்றாலும், அங்கேயும் நமது தமிழ்நாட்டுக்காரர்தான் சம்பந்தப்பட்ட துறையின் அமைச்சராக இருக்கிறார் என்பதால், புதிய பாலத்திற்கான வேலைகளில் தாமதம் ஏற்படுவதற்கான வாய்ப்புகளே இல்லை.

இந்தச் சூழ்நிலையோடு, இந்த அரசும் விரைவாகச் செயல்படுவதில் ஆர்வம் காட்டி வருவதால், இந்தப் பாலமும் விரைவாகக் கட்டி முடிக்கப்பட்டுவிடும் என்றே மக்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

- இளங்கோவன்

வண்ணப்படங்கள் : பேஜர் கே. மூர்த்தி

---

"இதுக்கு முன்னே நீங்க யாரையும் காதலிச்சது கிடையாது. இதுதான் உங்களோட முதல் காதல்ங்கிறதை நம்புறேன். தயவு செஞ்சு அதை கழட்டி வச்சிடுங்க ரமேஷ்!"

- ஆலத்தம்பாடி ராஜகோபால்



---

"டாக்டர்! என் பையன் கொஞ்ச நாளா, தெரு ஓரமா தென்படற செடியை எல்லாம் பிடுங்கி கசக்கிப் பார்க்கறான்; பயமாயிருக்கு!"

"கவலைப்படாதீங்க; பெட்ரோல் தர்ற அந்தச் செடியைத் தேடறானா இருக்கும்!"

– 'பரணி' மனோ





"என்னங்க, உங்களை வாத்து மடையன்னு திட்டணும்போல இருக்குங்க..."

"ஹி...ஹி... ஏன் அப்படி?"

"பின்ன, காதுக்கு டிராப்ஸ் வாங்கிட்டு வரச் சொன்னா ஜுவல்லரிலே வாங்காம மெடிக்கல் ஷாப்ல வாங்கிட்டு வந்தா என்னங்க அர்த்தம்?"

– சீர்காழி வி. ரேவதி

# வட்டமேஜை

**ரூ. 20/-**
**பரிசுக் கடிதம்**

✉ 'சிநேகத்தின் துரோகம்' மன்னிக்க முடியாதது; மறக்க முடியாதது; 'மக்களுக்குப் பொறுப்புணர்ச்சி வேண்டும்' என்ற சமாதானத்தில் நியாயம் இருக்கலாம்; ஆனால் நேயம் இல்லை. இது போன்ற நிறுவனங்கள் ஆரம்பிக்க அனுமதி கேட்கப் படும்போதே அதன் வலுவான பொருளாதார நிலை, தொடங்குபவர்கள் தந்துள்ள தகவலின் அடிப்படையில் அது உண்மையா? பொய்யா? என்ற ரகசிய அல்லது பகிரங்க விசாரணை போன்றவற்றை செயல் படுத்திய பின்னரே இம்மாதிரியான நிறுவனங் களுக்கு அனுமதி அளிக்க வேண்டும்...!

விராலிமலை, ச. நாகராஜன்.

✉ மத்திய அமைச்சர் முரசொலிமாறன் அவரது அலுவலகத்தில் காந்தி படத்தை அகற்றியது மனத் திற்கு வருத்தமாய் உள்ளது. மகாத்மா காந்தி அனை வருக்கும் பொதுவானவர். இதில் என்ன அரசியல் வேண்டியிருக்கு?

சென்னை - 101, இ. பாலசுப்பிரமணியன்.

✉ ஆக, போயஸ் தோட்டத்து அம்மை யாருக்கு புத்தி

## எந்தம்மா?

புகட்ட வேண்டியது, 'மிஸ்டர் கோபாலபுரம்' தான் என்பதை சொல்லாமல் சொல்லி விட்டீர்கள், தலையங்கம் வாயிலாக. சபாஷ்!

கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

✉ "போயஸ் தோட்டத்து போதிமரம்" தலையங் கமும் அ.தி.மு.க. தொண்டர் காதில் ஜெயலலிதா பூ சுற்றும் கார்ட்டூனும் உலக மகா ஊழல் போட்டி கார்ட்டூனும் வெளியிட்டுள்ள உமக்கு நிச்சயமாக ஸ்பெஷல் பூனைப்படை காவல் கண்டிப்பாகத் தேவை சார்! அந்தளவிற்குக் காரமாக இருக்கிறது!

பெங்களூர் - 21, ப. மூர்த்தி.

✉ 'உலக மகா ஊழல் போட்டி' தலைசிறந்த தலைப்பு; சக்கை போடு போடும் சரியான கார்ட் டூன். 'நடுவில அந்தம்மாவுக்கும் இடம் விட்டு நில் லுங்க' எனும் வாசகம் சூசகமாகக் குறிப்பிடப்படு வதால், 'எந்தம்மா' என்ற கேள்வி எழுகிறது. உடன் இன்னொரு அம்மாவின் உருவமே எண்ணத்தில் மின்னலெனப் பளிச்சிடுகிறது; இலைமறை காயாக எழுதும் உங்கள் கலைநயத்திற்கு எங்கள் உள்ளங் கள் உள்ளபடியே கொள்ளை போயின!

பொறையாறு, கானா. கணேசன்.

✉ பத்திரிகை விமர்சனங்கள் ஒரு படத்தின் வெற்றியையோ வீழ்ச்சியையோ பாதிப்பதில்லை. - சுஜாதா பக்கம்.

'செயிட்டி'யில் 'அன்னக்கிளி' ரிலீஸான 2-வது நாள் படத்தைப் பார்த்தேன். நல்ல படம்தான். ஆனால் தியேட்டரில் பாதி நாற்காலிகள்தான் படத் தைப் பார்த்தன. இரண்டாவது வாரம் படத்தைப் பற்றி விமர்சனங்கள் பத்திரிகையில் நல்ல முறையில் வரத் தொடங்கி, பிறகு அந்தப் படம் சரித்திரம் படைத்ததை சுஜாதாவுக்கு நினைவு படுத்துகிறேன்!

சென்னை - 91, மடிப்பாக்கம் வெங்கட்.

✉ ஏறிவரும் ஏணியை மறவாமல் இருக்கும் அஜித் இறுதி வரை மாறாமல் இருப்பாரா? பொறுத்திருந்து பார்ப்போம்!

கமுதி, ஜே.வி.ஆர்.

✉ அன்று முதல் இன்று வரை ஆங்கிலோ-இந்தியர் சமூகங்களின் வாழ்க்கைத் தரம், பொருளாதார ரீதியில் எப்படி இருக்கிறார் கள் என்பதைப் பற்றிய ஆழமான அலச லுடன் அமைந்தது அட்டைப் படக் கட்டுரை. அந்தச் சமூக மக்களைப் பற்றிய பல புதிய செய்திகளை விரிவாக அறிந்து கொள்ள முடிந்தது. இப்புதிய அரசாவது இவர் களின்பால் அதிக அக்கறை கொண்டு கை கொடுத்து உயர்த்திவிட வேண்டும்.

திண்டுக்கல், வி.எஸ். ராமு.

✉ மனோரமாவை மனம் திறந்து கொட்ட வைத்து, ரஜினிக்கும் மனோரமாவுக்கும் முடிச்சைப் போட்டு முகம் சுளிக்க வைத்தவர்களின் முகத்திரையைக் கிழித்த கல்கிக்கு என் பாராட்டுக்கள். "குற்றமனப் பான்மை குறுகுறுக்கிறதே"ன்னு சொன்ன மனோ ரமாவின் மேல், மேலும் மதிப்புதான் கூடுகிறது.

மேட்டுத்திருக்காம்புலியூர், க. குழந்தைவேல்.

✉ 'இப்படிப்பட்ட ஆட்களுக்கா பிரசாரம் செய் தேன்?" என்று ஆச்சி, மனத்தில் அரித்துக் கொண் டிருந்த சுமையை இறக்கி வைத்தது காலம் கடந்த ஞானோதயம் ஆகும். ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன். ஆச்சியின் அ.தி.மு.க. ஆதரவு பிரசாரத்திற்குப் பிறகு, ஒருவேளை ஜெயலலிதா முதலமைச்சராகவும், மனோ ரமா அதிமுகவின் கொள்கைப் பரப்பு செயலாளராக வும் ஆகி இருந்தால் இப்படி வருத்தம் தெரிவித்து இருப்பாரா?

பெங்களூர், மு. புஷ்பராசன்.

✉ கிருஷ்ணா எழுதிய 'அதிர்வு' படித்தேன். மெல்லிய, அழகான அதிர்வு!

ஸ்ரீரங்கம், சௌரிராஜன் ராஜேஷ்.




1996 செப்டெம்பர் 22
தாது புரட்டாசி 6
மலர் : 55
இதழ் : 8

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.




## முரசொலி மாறன் கவனத்துக்கு!

**தொ**ழில்துறைக்கு மகிழ்ச்சி தரக்கூடிய அறிவிப்புகளை வெளியிட்டிருக்கிறார் பிரதமர். மாநிலங்களுக்கு மின் திட்டங்கள் தொடங்க சுய அதிகாரம், சாலை வசதிகள் பெருகுவதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் நில ஆர்ஜித சட்டங்களைத் திருத்துதல் என்று பல கொள்கை முடிவுகளை அறிவித்திருக்கிறார்.

இவை தவிர, அயல்நாட்டு முதலீட்டாளர்களைக் கவரும் அறிவிப்புகளும் வெளியிடப் பட்டுள்ளன. இந்தியாவில் தொழில் தொடங்க மனுச் செய்திருந்த 350 அயல்நாட்டு முதலீட்டாளர்களின் திட்டங்களுக்கு மத்திய அரசு அனுமதி அளித்துள்ளது. இவ்வாறு அனுமதி அளிக்கும் பொறுப்பு, ஐக்கிய முன்னணி ஆட்சியின் கீழ், பிரதமர் அலுவலகத் திலிருந்து தொழில் துறைக்கு மாற்றப்பட்டு, தொழில் அமைச்சர் முரசொலி மாறனின் நேரடிப் பொறுப்பாக்கப்பட்டது. மாறன், இரண்டு மாத காலத்தில் அத்தனை மனுக்களை யும் ஆராய்ந்து முடிவு தெரிவித்த சுறுசுறுப்பைப் பாராட்டலாம்.

அயல்நாட்டு முதலீட்டாளர்கள், தொழில் நுட்பத்தையும் நமக்கு வழங்க வேண்டும்; நமது தொழிலாளர்களின் நலன் பேண வேண்டும் என்று பிரதமர் வலியுறுத்தியிருக்கிறார். இதையும் பாராட்டலாம்.

அதே சமயத்தில், அமைச்சர் மாறன் சுட்டிக்காட்டியுள்ள ஒரு விஷயமும் கவனிக்கத் தக்கது. 350 திட்டங்களுக்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டுவிட்டாலும், அவை எல்லாமே உடனடியாகச் செயல்பட ஆரம்பிக்காது. பல மெகா திட்டங்கள் தொடங்கப்படவே நீண்ட




காலம் ஆகிவிடும். எனவே உடனடியாக நாம் பெறக் கூடிய அயல்நாட்டு முதலீடு என்பது, ஒப்புதல் அளிக்கப்பட்ட மொத்த திட்டச் செலவில் சுமார் 23 சதவிகிதம்தான்.

இது ஒருபுறமிருக்க, மிக அவசியமான அயல்நாட்டு முதலீட்டினால் சில அபாயங்களும் விளைய வாய்ப்பு இருக்கிறது.

நம் நாட்டில் தொழில் நுட்பத்தையும் பொருளையும் முதலீடு செய்யும் அயல்நாட்டவர், தாம் ஈட்டும் லாபத்தை மீண்டும் தாய்நாட்டுக்கே எடுத்துப் போவதில் கண்ணும் கருத்து மாய் இருப்பார்கள். இதைக் குறை கூறவோ தடை செய்யவோ இயலாது.

எனவே அயல்நாட்டாரின் முதலீடு மூலம் நாம் பெறக்கூடிய லாபம் அதிகரிக்க வேண்டுமானால் அவர்கள் துணையுடன், ஏற்றுமதி சார்ந்த உற்பத்தித் தொழில்களைத் தொடங்குவதே அறிவுடைமையாக இருக்கும்.

விரைவான ஏற்றுமதிப் பெருக்கத்தின் மூலம் கிடைக்கக் கூடிய அன்னியச் செலாவணி மட்டுமே நமது அன்னியக் கடன்களைக் குறைத்து நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்திருத்த முடியும். விவசாயம் சார்ந்த தொழில்களானால் இன்னும் நல்லது.

மிகப் பெரிய ஜனத் தொகை உடையதாயினும் நமது நாட்டில் சராசரி மக்களின் பொருளாதார பலம் மிகக் குறைவு என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

சலுகைகள் பெற்று, தொழில் தொடங்கி உற்பத்தியையும் பெருக்கிவிட்டால், 'கடை விரித்தேன் கொள்வாரில்லை' என்ற கதையாகிவிடும். எனவே இந்திய நுகர்வோர் சந்தையின் பலமும் பலவீனமும் உணர்ந்து செயல்பட வேண்டும். சர்வதேச சந்தையை மனத்தில் கொண்டே உற்பத்தித் தரமும் திறனும் அளவும் மதிப்பிடப்பட வேண்டும்.

சுறுசுறுப்பாக இயங்கும் தொழிலமைச்சர் இவ்விஷயத்தில் தீர்க்கதரிசனத்துடனும் செயல்படுவார் என்று நம்புவோம்.

அயல்நாட்டு நிறுவனங்கள் தயவின்றியே, குறைந்த முதலீட்டில் நிறைய அன்னியச் செலாவணி சம்பாதிக்க ஒரு சுலபமான வழி இருக்கிறது. நமது சுற்றுலா துறையை முடுக்கி




விட்டு, அயல்நாட்டுச் சுற்றுலா பயணிகளின் வருகையை அதிகரிக்கச் செய்வதே அவ்வழி!

தமிழக அரசு, ஒரு தனியார் நிறுவன ஆலோசனை பெற்று சுற்றுலா துறைக்கும் புத்துயிர் அளிக்கவிருப்பதாக அறிவித்திருக்கிறது.

மத்திய அரசும் சுற்றுலா துறையின்பால் சிறப்பு கவனம் செலுத்த வேண்டும். அயல்நாட்டுப் பயணிகளைக் கவர்ந்திழுக்கக் கூடிய ஏராளமான இயற்கை அழகுகளும் அற்புதமான கலைப் பெட்டகங்களும் கொண்டது நமது நாடு.

ஆனால், இவற்றையெல்லாம் ஆங்காங்கே தங்கியிருந்து அனுபவிக்கவும் கண்டு களிக்கவும் சுகாதாரமான, அடிப்படை வசதிகள் கொண்ட தங்குமிடங்கள் தேவை. ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள் பெருகினால் போதாது. மிதமான செலவில் தங்கக்கூடிய விடுதிகள் தான் சராசரிப் பயணிகளுக்குக் கட்டுப்படியாகும்.

பரந்து விரிந்த நம் நாட்டின் பல மூலை முடுக்குகளிலும் உள்ள சுற்றுலாத் தலங்களைத் திட்டமிட்டபடி சென்றடைய சிறப்பான போக்குவரத்துத் தடங்களும் சௌகரியமான வாகன வசதிகளும் அத்தியாவசியம்.

இந்தத் தங்குமிடங்களையும் வாகன, சாலை வசதிகளையும் எந்த அயல்நாட்டின் உதவியையும் நாடாமல் நாமே எளிதில் நிறைவேற்றிக் கொள்ளலாம். அவ்வாறு நிறைவேற்றிக் கொள்வதனால் அயல்நாட்டுப் பயணிகளையும் அவர்கள் மூலம் அன்னியச் செலாவணியையும் ஈர்க்கலாம்.

மிகச் சுலபமாக நாம் அடையக் கூடிய இந்த லாபத்துக்கு ஓரளவு திட்டமிடலும் நிறைய ஈடுபாடும் தேவை. சுற்றுலா துறை என்பது விருந்தோம்பல் சார்ந்த துறையென்பதால், எடுக்கப்படும் ஒவ்வொரு முடிவும் அயல்நாட்டுப் பயணியின் சௌகரியத்தையும் சுகத்தையும் மனத்தில் கொண்டதாக இருக்க வேண்டும்.

இதை ஒரு மிகப் பெரிய திட்டமாக்கிச் செயல்படுத்த, இந்திய சுதந்தரத்தின் பொன் விழா ஆண்டையே நல்ல சந்தர்ப்பமாகப் பயன்படுத்தலாம்.

**பி**ந்து டெல்லியைச் சேர்ந்த இளம்பெண்.

பிறக்கும்போதே ஒருவித எலும்புமுறிவால், அவளது ஒரு கால் மற்றொன்றை விட ஆறு அங்குலங்கள் குறைவாக இருந்தது. இதன் காரணமாக எப்போதும் ஊன்றுகோலுடனேயே நடக்க வேண்டி வந்தது அவளுக்கு. இதற்காக என்னிடம் சிகிச்சைக்கு வந்திருந்தாள்.

'கன்ஜினிடல் ஸூடோ ஆர்த்ரிஸ்' என்று மருத்துவ உலகில் அழைக்கப்படுகிறது இந்த குறைபாடு. இதற்கு 'ரஷ்யன் டெக்னிக்' எனப்படும் முறையைப் பயன்படுத்தி சிகிச்சை செய்தேன்.

ஏற்கெனவே உயரக் குறைவாகவும், பாதிக்கப்பட்டும் இருந்த அவளது வலது காலில், மேலும் ஆறு அங்குலங்கள் நீக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. காரணம் அங்குள்ள எலும்புப் பகுதி 'இறந்திருந்தது'தான். பிறகு மற்றொரு ஆரோக்கியமான எலும்பின் பகுதியை அங்கு வைத்து, அதை சிறப்புச் சிகிச்சையின் மூலம் பன்னிரண்டு அங்குலம் வளர வைத்து மறுகாலுடன் சமமாக இருக்கும்படி அமைத்தேன்.

சில வரிகளில் சொல்லிவிட்டேன் என்றாலும் இந்தச் சிகிச்சைக்காக சுமார் ஒன்றரை வருடங்கள் சொந்த ஊரான டில்லியை விட்டு அந்தப் பெண் சென்னையில் தங்கவேண்டியிருந்தது (இந்த அறுவை சிகிச்சை நடைபெற்ற 1991 ஆம் ஆண்டில் சென்னையில் மட்டுமே இந்த சிகிச்சை முறை இருந்தது.

# வி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள் :

எலும்பு அறுவைச் சிகிச்சை நிபுணர் டாக்டர் கோபாலகிருஷ்ணன் (அப்போலோ).

அன்புள்ள டாக்டர் மற்றும் பாராட்டுக்குரிய சகோதரனுக்கு,

என் உணர்வுகளை நீங்கள் புரிந்து கொண்டவிதமும் நீங்கள் அளித்த ஊக்கமும் எனக்கு மிகவும் உதவியாக இருந்தன. நீங்கள் நினைப்பதை விடப் பல மடங்கு அதிகமான உதவி அது.

புத்திசாலித்தனமான முடிவுகளை என் விஷயத்தில் எடுத்தீர்கள். கடைசி வரை என் 'லட்சியத்தை' அடைய எனக்கு உறுதுணையாக இருந்தீர்கள்.

எனக்கு வாழ்க்கையில் ஒரு பிடிப்பு வரக்காரணமே நீங்கள்தான்.

எனக்கு மறுவாழ்வு கொடுத்ததற்காக மீண்டும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நிறைய அன்புடன்,
உங்கள் (முன்னாள்) நோயாளி,
பிந்து கௌல்.

• டாக்டர் கோபாலகிருஷ்ணன்



போன மாதம்தான் டெல்லி மருத்துவமனை களில் அறிமுகமாகியிருக்கிறது).

சிகிச்சையின்போது பிந்து அளித்த ஒத்துழைப்பு குறிப்பிடத்தக்கது. மருத்துவ மனையிலேயே வேலை பார்த்த மற்றொரு டாக்டர் இவளை விரும்ப, சமீபத்தில் இவர் களுக்கிடையே திருமணம் நிச்சயமாகியிருக் கிறது!

இனி அவளுக்கு ஊன்றுகோல் தேவை யில்லை. சகஜமாக நடக்கலாம். தாழ்வு மனப்பான்மை அவளை விட்டு ஓடி விட்டது. கல்லூரியில் சேர்ந்து சட்டப் படிப்பை முடித்து விட்டாள். அடிக்கடி என்னுடன் கடிதத் தொடர்பு கொண் டிருக்கிறாள். விரைவில் ஒரு ஃபேஷன் டிசைனராகப் பணிசெய்ய இருப்பதா கவும், அதற்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருப்பதாகவும் உற் சாகமாகத் தெரிவித்திருக்கிறாள்.

இதுபோன்ற செய்திகள் தானே என்னைப் போன்ற மருத்துவர் களுக்கு டானிக்!

தொகுப்பு : அருண்சரண்யா



…பெறுகிறார் விஜய் சிவா

…டுமே நினைவூட்டி, அவையோரை மெய்சிலிர்க்க வைத்து, கரவொலியையும் பெற்றுத் தந்தது. 1947 சுதந்தர தினத்தையொட்டி அமரர் கல்கி அவர்கள் இயற்றிய கவிதையை ராகமாலிகா விருத்தமாகப் பாடி முடித்த கையோடு, "ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" என்ற பாரதி பாடலை விஜய் சிவா ஆரம்பித்தபோது ரசிகர்கள் பரவசமடைந்து 'ஆஹா'காரம் செய்தார்கள்.

# மெய்சிலிர்க்க ஒரு மாலைப்பொழுது!

“அரங்கம் நிரம்பி வழிந்தது” என்று சம்பிரதாயமாகக் கூறுவதுண்டு. ஆனால் அமரர் கல்கி பிறந்த நாள் விழாவில் ஸ்ரீநிவாச சாஸ்திரி அரங்கம் நிஜமாகவே நிரம்பி வழிந்தது! வாசலில் இரட்டை ஜமுக்காளம் விரித்து, வெளியே கூடுதல் ஒலி பெருக்கி வைத்தும் பலர் கடைசி வரை நின்று கொண்டே நிகழ்ச்சிகளைக் கண்டு, கேட்டு மகிழ்ந்தார்கள்!

இவர்களில் மிகப் பெரும்பாலோர் இளைஞர்கள். 'கர்நாடக சங்கீதத்தில் இளைய தலைமுறைக்கு நாட்டம் இல்லை; தேசபக்தி என்றால் கிலோ என்ன விலை என்று கேட்பார்கள்' என்ற பொல்லாத கருத்துக்களையெல்லாம் பொய்யாக்கத் திரண்டு வந்தவர்கள்.

இந்த விழாவில் "கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு விருது" முதன் முதலாக இளம் பாடகர் விஜய் சிவாவுக்கு வழங்கப்பட்டது. அதன்பின்னர் அவர் தேசபக்திப் பாடல்களைத் தொகுத்து முழு நேரக் கச்சேரி செய்தார். தேசபக்திப் பாடல்கள் என்றால் ஏதோ 'லைட் மியூஸிக்' பாணியில் இருந்திருக்கும் என்று எண்ண வேண்டாம். பைரவி, காம்போதி போன்ற கனராகங்களை எடுத்து ஆலாபனை செய்து, புதிய சிகரங்களைத் தொட்டுக் காட்டினார். கீர்த்தனைகளில் நிரவல், சுவரப்பிரஸ்தாரம் எல்லாம் செய்து, ராகத்தின் நுணுக்கமான அழகுகளையும் கீர்த்தனைகளின் கருத்தாழங்களையும் வெளிப்படுத்தினார். தானம் பாடுவதைக் கூட அவர் விட்டு வைக்கவில்லை! சுதந்தரத்தின் பொன்விழா ஆண்டினை ஒவ்வொரு பாட…

அரியதொரு தமிழிசைக் கச்சேரியாகவும் அமைந்த இந்த நிகழ்ச்சியில் பக்கவாத்தியக் கலைஞர்களும் இளைஞர்கள். ஒரு கச்சேரியை 'ஓகோ' என்று பக்கவாத்தியக் கலைஞர்களால் உயர்த்தவும் முடியும்; ஈடுபாடற்ற வாசிப்பால் சராசரிக்குத் தாழ்த்தி விடவும் முடியும். அன்று வயலின் வாசித்த பாம்பே காயத்ரி தேசியக் கொடியை 'புருச்'சாகத் தோளில் அணிந்திருந்தது மட்டுமல்ல; தேசபக்தியை உள்ளத்தில் குடியேற்றியும் இருந்தார். அதனால் விஜய் சிவாவின் உற்சாகம் அவரையும் தொற்றிக்கொள்ள, சிறப்பாக ஈடுகொடுத்து வாசித்தார். லய வித்வான்கள் மிருதங்கம் வைத்தியநாதனும் கஞ்சிரா புருஷோத்தமனும் போட்டி போட்டுக் கொண்டு கச்சேரி களைகட்ட ஒத்துழைத்தார்கள்.

கச்சேரி 'ஜமா'வாக இருந்தது என்றால் முன்னதாக விருது வழங்கும் விழாவும் ஜாஜ்வல்யமாக அமைந்தது. "இந்த விழாவே சுருதி சுத்தமாக, இனிமையாக ஆரம்பமாயிற்று" என்று செம்மங்குடி தமது சிறப்புரையின் தொடக்கத்திலேயே குறிப்பிடும் அளவில்

சிறுமி காயத்ரி இறைவணக்கம் பாடி, எல்லோருடைய செவிகளை மட்டுமின்றி இதயங்களையும் கொள்ளை கொண்டு விட்டாள்!

அமரர் கல்கி நினைவு அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் கி. ராஜேந்திரன், அவையோரையும் சிறந்த தேசபக்த தியாகிகளான பிரதம விருந்தினரையும் வரவேற்றார்.

விஜய் சிவாவுக்கு விருது வழங்கி ஆசி கூறிய செம்மங்குடி சீனிவாச அய்யர், இன்றைக்கும் தாமே நூல் நூற்றுக் கதராடை புனைபவர். பாரதி பாடல்களை நிறையக் கச்சேரிகளில் பாடிப் பிரபலப்படுத்தியவர். இன்றைய இசை உலகின் பிதாமகர். ஸ்ரீமதி டி.கே. பட்டம்மாள், ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி ஆகிய இருவருமே தேசபக்திப் பாடல்கள் மூலம் சுதந்தரக் கனலை மக்கள் உள்ளங்களில் மூட்டியவர்கள். அவர்கள் நோக்கில் பராசக்தி வேறு, பாரத மாதா வேறு அல்ல. இருவரும் ஒருவரே! அது தானே பாரதியாருடைய கருத்தும் கூட.

சதாசிவம் அவர்களோ, மும்முறை சிறை சென்ற தேசபக்தர். கதர் பிரசாரம் செய்து வீதி வீதியாக பாரதி பாடல்களைப் பாடிச் சென்றவர்.

இத்தகையவர்கள் முன்னிலையில் செம்மங்குடி அவர்களின் திருக்கரங்களால் விருது பெறுவது என்பது எத்தனை பெரிய பாக்கியம்!

அன்றைய விழா, ஸ்ரீமதி எம்.எஸ்., ஸ்ரீ சதாசிவம் ஆகிய இருவரின் பிறந்தநாள் விழாவாகவும் விளங்கியது என்றால் மிகையாகாது. "ஸ்ரீசதாசிவம் இம்மாதம் 94 வயது பூர்த்தி செய்கிறார். ஸ்ரீமதி எம்.எஸ். அவர்களோ 80 வயது கடந்து 81 வது வயதில் அடியெடுத்து வைக்கிறார். '94 என்பதைத் திருப்பிப் போட்டால் 49தானே' என்று சதாசிவம் சிரித்துக் கொண்டே கூறுவார். அப்படிப் பார்த்தால் எம்.எஸ்ஸுக்குப் பதினெட்டு வயதுதான்! இந்த இளம் தம்பதி இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தமிழகத்துக்கும் பாரதத்துக்கும் உலக அரங்கிலே பெருமைசேர்க்க வேண்டும்" என்று கி. ரா. கூறியபோது, அரங்கம் அதிர கரவொலி எழுப்பி அவையோர் ஆமோதித்தனர்.

ஈசுவரன் - பட்டம்மாள் தம்பதியும் சதாசிவம் - எம்.எஸ். தம்பதியும் இளம் பக்கவாத்தியக் கலைஞர்களுக்குச் சால்வைகள் போர்த்தி ஆசி வழங்கினர்.

விருது வழங்கி சிறப்புரை ஆற்றிய செம்மங்குடி, "கச்சேரி செய்து விடலாம், ஆனால் பாட்டு சொல்லிக் கொடுத்து சிறந்த கலைஞர்களை உருவாக்குவது என்பது அதைவிடக் கஷ்டமானது. அந்தக் கலையில் டி.கே. ஜெயராமன் சிறந்து விளங்கினார். அதனால்தான் விஜய் சிவா போன்ற ஓர் அரிய சிஷ்யர் கலை



• கச்சேரியில்....

ஞர் நாம் பாராட்டும்படி உயர்ந்திருக்கிறார். இன்றைக்குப் பட்டம்மாளுக்கும் ஜெயராமனுக்கும்தான் ஏராளமான சீடர்கள்" என்று சொன்னபோது டி.கே.ஜே.யை எண்ணி ரசிகர்கள் மனம் நெகிழ்ந்தார்கள். விஜய் சிவா விருது பெறுவதைக் காண குரு டி.கே.ஜே. இல்லாது போனாலும் குருவின் குருவான டி.கே. பட்டம்மாள் பார்த்து மகிழ்ந்தது அந்தக் குறையை ஈடுசெய்வதாக அமைந்தது.

கல்கி நினைவு அறக்கட்டளையின் அறங்காவலர்களுள் ஒருவரான வி. கோபாலன் நன்றியுரையாற்றினார். இந்த அறக்கட்டளையை ரூ. 1000 கொடுத்து ஆரம்பித்துவைத்ததே சதாசிவம் - எம்.எஸ். தம்பதிதான் என்பதை நினைவு கூர்ந்து, இந்த ஆண்டு ரூ. 75,000 ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகைகளாக விநியோகமாகி இருப்பதைக் கூறி, இன்னும் இரண்டே ஆண்டுகளில் தொடங்க இருக்கும் அமரர் கல்கியின் நூற்றாண்டின்போது இத்தொகை ரூபாய் ஒரு லட்சமாக உயரும் என்றும் நம்பிக்கை தெரிவித்தார். அமரர் கல்கி அவர்கள்



• கணவருடன் இசை நிகழ்ச்சியை ரசிக்கிறார் பட்டம்மாள்

●● இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இன்றைய முதல்வர் கருணாநிதி திறந்து வைத்ததுதான், மன்னார்குடி ஸ்ரீராஜகோபாலசுவாமி அரசினர் கலைக் கல்லூரி. ஆனால் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் போதிய அளவில் இல்லாததால் இக்கல்லூரி இன்று சீராக இயங்கவில்லை. ஆசிரியர்கள் விடுப்பில் சென்றால் வகுப்புகள் நடக்காது! இந்தக் குறைபாடு களைந்து கல்லூரி சீராக இயங்க அரசு தக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

கும்பகோணம்,
கே. என். பாலகிருஷ்ணன்.



• இடிபாடுகளிடையே மாசிலாநாதர்!

"...மூகத்தைச் சேர்ந்தவர்?" என்று கேட்கப்பட்டது. இடஒதுக்கீடு போன்ற அம்சங்களில்தான் ஜாதியை ஒழிக்க முடியவில்லை; இது போன்ற தேவையற்ற விஷயங்களிலெல்லாம் ஜாதியைப் புகுத்துவதையாவது தவிர்க்கலாமே?

தூத்துக்குடி - 2,
அஞ்சலி மாரியப்பன்.

# இரக்கமற்ற ஆணை ரத்தாகுமா?

●● பத்தமடை அரசு ஆஸ்பத்திரியில் அறுவைச் சிகிச்சை தியேட்டர் கட்டப்பட்டு, நவீன வசதிகளுடன், ஒரு வருஷத்துக்கும் மேலாக மருத்துவரின் வருகைக்குக் காத்திருக்கிறது. எப்போ வருவாரோ?

திருநெல்வேலி,
எஸ்.ஆர். ஸ்வாமி.

●● அரசு ஊழியர், பணிக்காலத்திலேயே இறந்துவிட்டால் அவரின் வாரிசுக்கு குடும்பப் பென்ஷனுடன் அதற்கான அகவிலைப்படியும் வழங்கப்பட்டது. இப்போது திடீரென 'அகவிலைப்படி கிடையாது' என்று உத்தரவு வந்துள்ளது. தவிர, 'ஏற்கெனவே விநியோகமான அகவிலைப்படியை இனி வழங்கவிருக்கும் பென்ஷனில் பிடித்தம் செய்ய வேண்டும்' என்றும் இந்த அநியாய உத்தரவு கூறுகிறது. ஜெயலலிதா அரசின் இந்த இரக்கமற்ற ஆணையை இன்றைய தி.மு.க. அரசு ரத்து செய்ய வேண்டும்.

திருபுவனம்,
ஆ. காந்திமதி.

●● தரங்கம்பாடி "மாசிலாநாதர்" திருக்கோயில் புராதனமானது; பிரசித்தி பெற்றது; பாடல் பெற்ற தலமுமாகும். பெருமைவாய்ந்த இத்தலம் கடல் அரிப்பால் சேதமுற்று, இடிபாடுகளுடன் காணப்படுகிறது. எஞ்சி இருப்பது மூலஸ்தானம் மட்டுமே. அடுத்த புயல் மழையில் மாசிலாநாதரையும் கடல் விழுங்கிவிடலாம் என்ற நிலை! அறநிலையத் துறைக்கு உட்பட்ட இக்கோயில் காப்பாற்றப்பட்டே ஆகவேண்டும். அமைச்சர் கவனித்து ஆவன செய்வாரா?

பின்னத்தூர்,
வெ. சீனிவாசன்.

●● சன் டி.வி. "அனுபவம் பலவிதம்" நிகழ்ச்சியில் வி.ஐ.பி. ஒருவர் பெயரைக் கூறி, "இவர் எந்த ...

தலைசிறந்த தேசபக்த தியாகியாக விளங்கியதோடு, கலைகளின் மறுமலர்ச்சிக்கும் அளப்பரிய பணிபுரிந்திருப்பதை நினைவில் கொண்டு, இளம்கலைஞர்களை ஊக்குவிக்கும் திட்டமும் இந்த அறக்கட்டளையில் தொடங்கப்பட்டிருப்பதை விளக்கினார்.

அழகான ஆங்கிலத்தில் ஏற்புரை நிகழ்த்திய விஜய் சிவா, ஓர் அருமையான கருத்தை வெளியிட்டார். "இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக நம்மை அடிமைப்படுத்தி வைத்திருந்த ஆங்கிலேயரை விரட்ட தேசபக்திப் பாடல்கள் உதவியிருக்கும்போது, சுயநல எண்ணங்களை நமது உள்ளங்களிலிருந்து விரட்ட உதவாமலா போய்விடும்? எனவே ஒவ்வொரு பெற்றோரும் தங்கள் குழந்தைகளுக்கு தேசியகீதம் தவிர இரண்டே இரண்டு தேச பக்திப் பாடல்களையாவது குறைந்தபட்சமாகச் சொல்லிக் கொடுக்க வேண்டும்" என்றார்.

'நல்ல யோசனைதான்; ஆனால் செயல்படுத்த, முதலில் எங்களுக்கு தேசபக்திப் பாடல்கள் பாடத் தெரிந்திருக்க வேண்டுமே' என்று யோசிக்கும் பெற்றோருக்கு ஒரு சிறப்புச் செய்தி :

ஏ.வி.எம். ஆடியோ நிறுவனம் விஜய் சிவாவின் இந்த தேசபக்திப் பாடல்கள் கச்சேரியை ஒலிப்பதிவு செய்துள்ளது. ஒலிநாடா சீக்கிரமே விற்பனைக்கு வரும்.

- நமது நிருபர்
படங்கள் : யோகா

வித்தகர்: கீதா ராமசேஷன்

அந்த வழக்கின் முடிவுக்காக மாநிலமே காத்திருந்தது. முடிவு வந்தபோது நாடே வியந்தது!

இந்திரா காந்தி படுகொலை செய்யப்பட்ட சமயம். நாடு முழுவதிலுமுள்ள சீக்கிய சமூகத்தினர், தாக்கப்பட்டனர். தமிழ்நாட்டில், கோவையில் வன்முறை தாண்டவமாடியது! "எங்களுக்கு உதவ யாருமில்லையா?" என்று சீக்கிய சமூகத்தினர் ஹிந்து நாளிதழில் ஒரு விளம்பரமே கொடுத்திருந்தனர்.

அதைப் படித்துவிட்டு, கோவைக்கு விரைந்தார் வழக்கறிஞர் கீதா ராமசேஷன். ஒரு சிநேகிதி மட்டும் உடன் வர, அவர் முதலில் சென்றது குருத்வாராவுக்கு.

பாதிக்கப்பட்ட பல சீக்கியர்களை நேரில் சந்தித்து, அவர்கள் அனுபவித்த கொடுமைகள், அடைந்த இழப்புக்களைக் கண்டறிந்து, விவரங்களை ஓர் அறிக்கையாகத் தயாரித்தார் கீதா.

அந்த அறிக்கையின் அடிப்படையில் வழக்கறிஞர்கள் பாலதண்டபாணியும் ஆ.காந்தியும் வழக்குத் தொடுக்க, வழக்கை நடத்தியவர் என்.டி. வானமாமலை.

கலெக்டர் மதிப்பீடு செய்தபடி சுமார் முப்பத்தி மூன்று லட்சம் நஷ்டஈட்டுத் தொகை பாதிக்கப்பட்ட இருபது சீக்கியக் குடும்பங்களுக்குப் பகிர்ந்து அளிக்கப்பட வேண்டும் என்று தீர்ப்புக் கூறினார் நீதிபதி எஸ். ஏ. காதர்!

அது மட்டுமல்ல... "கலவரப் பகுதிக்கு துணிந்து நேரில் சென்று விசாரணை செய்து, அறிக்கை அளித்த கீதா ராமசேஷனின் பொதுநல உணர்வைப் பாராட்டி, பதிவுசெய்கிறேன். இத்தகைய விழிப்புணர்வு மக்களிடையே மேலும் வளர வேண்டும் என்று விரும்புகிறேன்!" என்று முத்தாய்ப்புடன் தம் தீர்ப்பை எழுதினார்.



• கீதா ராமசேஷன்

# ஆண்ணா, பெண்ணா!

பள்ளிப் படிப்பை பீகாரிலும் கல்லூரிப் படிப்பை சென்னை எத்திராஜிலும் முடித்து, பின் சட்டம் பயின்ற கீதா, வழக்கறிஞர் ஜி. ராமசாமி கூடுதல் ஸொலிஸிடர் ஜெனரலாகப் புதுதில்லி போகும் வரை அவரது ஜூனியராகப் பணியாற்றியவர். ஆங்கிலம், ஹிந்தி, வங்காளி, சமஸ்கிருதம் எனப் பல மொழிகள் தெரியும். தமிழ், அம்மா மூலம் – வீட்டிலேயே கற்றார்.

சட்டப் படிப்பை வெறும் வருமானத்துக்கான தொழிலாகக் கருதாமல் சமுதாய நல நோக்குடன் அவர் செயல்பட ஆரம்பித்தபோதுதான் புகழும் பாராட்டுக்களும் அவரைத் தேடி வர



தேர்தல் பணிக்குச் செல்லும் அரசு அலுவலர்களிடம் வாக்காளர் பட்டியலில் துவங்கி, குண்டூசி வரை வாக்குச் சாவடிக்குத் தேவையான அனைத்துப் பொருட்களும் ஒப்படைக்கப்படும். இவற்றுள், மறக்க முடியாதது பால்பாயிண்ட் பேனா– 'எழுதவே எழுதாது' என்ற அசைக்கமுடியாத நம்பிக்கை இந்த பேனா மீது. ரொம்ப வயதான இந்த எண்ணத்தை வாபஸ் பெறுகிற மாதிரி நடப்பு உள்ளாட்சித் தேர்தலுக்கு வழங்கப்பட்ட பால்பென் அழகோ அழகு. எழுதிப்பார்த்ததும் ஆனந்தக் கண்ணீரே வந்து விட்டது. அத்தனை நேர்த்தி! 'மாநிலத் தேர்தல் ஆணையம்' பெயர் பொறித்த பால் பேனாக்கள்!

– ப. அப்துல்வகாப்

---




ஹ ஒட்டலில் ஒரு ஸ்வீட் ஸ்டால் 5 ரூபாய் நோட்டுகளை அதே அளவு பிளாஸ்டிக் கவர்களில் வைத்து ஓரம் தைத்து புழக்கத்திற்கு விடுகிறது. கவர்மீது, "நோட்டு அழுக்காகாமல், கிழியாமல் நீண்ட காலம் பயன்பட தயவு செய்து இப்படியே கையாளுங்கள்" என்ற வேண்டுகோளும் கடை விலாசமும் அச்சிடப்பட்டுள்ளது. சேவைக்குச் சேவை, விளம்பரத்துக்கு விளம்பரம்!

– அ. ஷண்முகசுந்தரம்

---

"சேல்ஸ் மேனேஜர் பதவிக்கு உங்களிடம் என்ன திறமை, முன் அனுபவம் இருக்கு?"

"என்னோட வீடு, தோட்டம், நிலம், கார், மனைவியோட நகை எல்லாத்தையும் வித்த அனுபவம் இருக்கு சார்!"

-பி.ஆர். மஹேந்திரநாத்ராவ்



ஆரம்பித்தன. நுகர்வோர் பிரச்னைகள், இலவச சட்ட உதவி எனத் தம் பணியை அவர் மேலும் விரிவாக்கினார்.

நீதிமன்றத்தில் வாதாடுவதுடன் மட்டும் தம் பணியை நிறுத்திக் கொள்ளாமல், இந்தியன் எக்ஸ்பிரஸ், அவுட்லுக் போன்ற இதழ்களில் சட்டக் கட்டுரைகள் எழுதுவதன் மூலமும் கவனம் ஈர்த்தார்.

'நிறையப் படிப்பது தம் பிளஸ் பாயின்ட்' என்று சொல்லும் கீதாவுக்கு இப் பழக்கத்தை உண்டாக்கித் தந்தது, அவர் பிலடெல்பியாவில் இருந்த அந்த ஒரு வருட காலகட்டம்.

"கம்பேரிடிவ் லா படிக்க அங்கே போயிருந்தேன். தனியாக இருந்த அந்த ஒரு வருடம் எனக்குப் புத்தகங்கள்தாம் துணை! நிறைய, ஆழ்ந்து படிக்கிற பழக்கம் அப்போது வந்ததுதான்" என்கிறார்.

அப்போது அமெரிக்க அதிபராக இருந்தவர் ஜார்ஜ் புஷ். அவரது தலைமையில் இயங்கிய ஐஸன்ஹோவர் ஃபவுண்டேஷன் வழங்கிய ஃபெலோஷிப்பில் பயில உலகம் முழுவதிலுமிருந்து சட்ட மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தேர்வு பெற்ற முப்பத்தி மூன்று பேரில் கீதா ஒருவர் மட்டுமே இந்தியர்!

"பயிற்சி முடிந்ததும் பிலடெல்பியாவில் பிரிவுபசார விழா நடைபெற்றது. புஷ் பேச வேண்டும், இறுதியாக. அதற்கு முன்னதாக மாணவர்கள் சார்பாக ஒருவர் பேச வேண்டும். நாலு நிமிட அவகாசம். அத்தனை பேரும் என்னைத் தேர்ந்தெடுத்துப் பேசச் சொல்ல, அது எனக்குக் கிடைத்த பெரிய கௌரவமாக அமைந்து விட்டது!" என்று பூரிக்கிறார் கீதா.

முன்னதாக பிட்ஸ்பர்க் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒருதரம் நெல்சன் மண்டேலா சொற்பொழிவாற்ற வந்திருந்தாராம். அவரது முன்னிலையிலும் பேசுகிற வாய்ப்பைப் பெற்றிருக்கிறார் கீதா.

'ஒரு பெண் என்கிற முறையில்...' என்று யாரும் பேசுவதையோ, கேள்வி கேட்பதையோ விரும்பாதவர் இவர்.

"ஆணாயிருந்தால் என்ன? பெண்ணாயிருந்தால் என்ன? நல்ல மனிதர்களாக இருக்க வேண்டும். அவ்வளவுதான்!" என்கிறார்.

- சுப்ர.பாலன்

# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



தொடர்ந்து **7** ஆண்டுகளுக்கு
ஒவ்வொரு **7** நாட்களுக்கு ஒருமுறை
உங்களுக்கு **7** கிலோ காய்கறி தர

## வருகிறான்

# காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7 கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது, அல்லது வருமானவரி விலக்குப்பெற்ற விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ.3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.

### முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A' | திட்டம் 'B' * | திட்டம் 'C' * |
|---|---|---|
| சுலப தவணைத்திட்டம் | குறுகிய தவணைத்திட்டம் | ஒரே தவணைத்திட்டம் |
| முன்பணம் ரூ. 3,500 | முன்பணம் ரூ. 11,800 | ஒரே தவணை |
| மாதத்தவணை ரூ. 2,675 | மாதத்தவணை ரூ. 11,000 | ரூ. 32,900 |
| மாதங்கள் 12 | மாதங்கள் 2 | |

* B மற்றும் C திட்டதில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும்.
பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.

இதுவரை 2000 குடும்பங்கள் பயனடைந்து வருகிறது. நீங்களும் சேர்ந்து பயனடையுங்கள்.




**B K எஸ்டேட்ஸ்**

18, வடக்கு உஸ்மான் சாலை, முதலாவது தளம்,
தி. நகர், சென்னை - 600 017.
தொ. பேசி. 8228282/8266978/8277234 பேக்ஸ் : 91-044-828 2792
கிளை : No. A3, SVV காம்ப்ளக்ஸ், 9, சாஸ்த்திரி சாலை, திருச்சி 620 017. போன் : 33613



**புதிய அலுவலக திறப்பு விழா சிறப்பு பரிசு !**
முதலீட்டாளர் மற்றும் அறிமுகப்படுத்துவோருக்கும் சிறப்பு பரிசு உண்டு!

JEGI/BKE/41/96

## 38. பூத்த புது உறவு

ராட்சதப் பறவையொன்று சிறகுகளை விரித்துத் தரையில் படுத்துக் கிடப்பதைப் போலப் பாண்டியர் படை கருட வியூகம் வகுத்து நிற்பதைப் பார்த்தான் கண்டகோபாலன். அதன் முன்னணியில் அந்தக் கருடனைவிடக் கூர்மையான விழிகளுடன் வீரபாண்டியன் தனது சாம்பல் நிறப் புரவியில் அமர்ந்திருப்பதையும் கண்டான். தான் காஞ்சியின் படைகளை சர்ப்ப வியூகத்தில் அழைத்து வருவதை அறிந்தே இளைய பாண்டியன் தன் படைகளை அணி வகுத்திருக்கிறான் என்பது புரிந்தது அவனுக்கு. தன் படைகளை விடப் பாண்டியர் படை சற்றுக் குறைவாக இருப்பதாகவும் பட்டது. மஞ்சள் முகச் சீனன் மட்டும் கருட வியூகத்தை விட்டுப் பிரிந்து கம்பீரமாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கவனித்தான்.

சிறு விழிகள் ஈட்டிகளின் முனைகளைப் போல ஜொலிக்கக் கண்ட கோபாலனை உற்று நோக்கிய யுவான், "கண்ட கோபாலரே! காஞ்சியில் தூது வந்த போது கூறியதையே மீண்டும் கூறுகிறேன். இப்பொழுது கூட இந்தப் போரைத் தவிர்க்க உங்களுக்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. உமது முடிவை அறிந்துவர இளைய பாண்டியர் உத்தரவிட்டிருக்கிறார்" என்றான்.

தனது மன்னனான காகதீய மன்னனிடமே சரணடைய விரும்பாத கண்ட கோபாலன், இரு கணங்களே சிந்தித்தான். தனது முடிவு போர்தான் என்று திட்டவட்டமாக அறிவித்தவன், உடனே தாக்குதலைத் தொடங்கவும் உத்தரவிட்டான்.

அவன் உத்தரவை முடிக்குமுன்பாக யுவானின் கரத்தில் அந்த சீனத்து வாள் முளைத்து மேலே உயர்ந்து, இருமுறை ஆடியது. பின்பு, தன்னை நோக்கிப் பாய்ந்த வீரர்களை நோக்கி இறங்கி கரகரவென சுழலத் தொடங்கியது. யுவானின் வாள் உயர்ந்த அதே வினாடியில் வீரபாண்டியனின் உத்தரவு பாண்டிய வீரர்களை முன்னோக்கிப் பாய வைத்துவிட்டதால் அடுத்த கணத்தில் இரு படைகளும் கலந்தன. காற்றைக் கிழித்து ஜிவ்வென்று உயர்ந்து இறங்கிய வேல்களும், வாட்கள் மோதியதால் எழுந்த ஒலிகளும், புரவிகளின் கனைப்பொலிகளும், வீரர்களின் மரணக் கூச்சல்களும் அந்தக் காலை வேளையில் மல்லை பெருஞ்சாலையில் சற்று நேரத்திலேயே உக்கிரமான ரணகளத்தை சிருஷ்டித்தன. பெரும் போர்ப் பறவை போன்று சிறகுகளை விரித்துக் கிடந்த பாண்டியர் படைப் பிரிவு இருமுறை சிலிர்ப்பதுபோல அம்புகளை வீசும் யந்திரப்



பொறிகளை இயக்கிவிட்டு, முன்னே நகர்ந்தது. இரு பக்கங்களிலும் கண்டகோபாலன் படைகளை நெருக்கி அவனது அணிவகுப்பை இரு துண்டுகளாக உடைக்கவும் செய்தது. கண்டகோபாலனைச் சந்திக்கப் புரவியைத் தூண்டிய யுவானை வீரபாண்டியனின் சமிக்ஞை தடுத்தது. வீரபாண்டியனின் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட யுவான், போர்க்களிறுகளிருந்த பகுதியை நோக்கித் திரும்பி ஊடுருவினான். களிறுகளின் பின்னாலிருந்த புரவி வீரர்களின் நடுவே ஒரு ரதத்தையும், பிரமை தட்டிய விழிகளில் அச்சம் வழிய போரை வெறித்துக் கொண்டிருந்த ஸ்வர்ணமுகியையும் கண்டான் யுவான்.

யுவான் அகன்ற இரண்டாவது கணத்தில் வீரபாண்டியனின் சாம்பல் நிறப்புரவி காற்றில் பறப்பது போலப் பாய்ந்து கண்டகோபாலனின் எதிரில் வந்து நின்று, தன் மொச்சைப் பற்களைக் காட்டி பலமாகக் கனைத்தது. அடுத்து கண்டகோபாலனுக்கும் அவனுடனிருந்த இரு உப தலைவர்களுக்கும் ஏக காலத்தில் வாட் பயிற்சியளிக்கத் துவங்கினான் வீரபாண்டியன்!

உறக்கமின்றி இரவு முழுவதும் நடந்த காஞ்சிப்படையின் களைப்பும், இடையில் காடவராயனால் ஏற்பட்ட குறுக்கீடும், பொக்கிஷப் பேழைகளைப் பறிகொடுத்ததால் உண்டான ஆயாசமும் மட்டுமின்றி, பாண்டியரின் வேகமும், திட்டமிட்டு வியூகம் வகுத்துத் தொடுத்த தாக்குதலும் போரின் முடிவை ஒரு ஜாம நேரத்திலேயே நிர்ணயிக்கத் தொடங்கின.

ஏராளமான மலைப்புஷ்பங்களும் மூலிகைகளும் நிறைந்து கிடந்ததால் புஷ்பகிரி என்று அழைக்கப்பட்ட அந்த மலைப்பகுதியும் அதையொட்டி, சுற்றிலும் குன்றுகள் ஆங்காங்கே எழுந்து நின்ற பகுதியும், வளமாகத் தெரிந்தன. குன்றுகளினூடே நெளிந்து வளைந்து சென்ற பாதை ஏற்ற இறக்கங்களுடன் உயர்ந்து கொண்டே போய் குன்றின் உச்சியை அடைவதைப் பார்த்தபோது மறுபுறம் நீலவானமும் மேகங்களும் மட்டுமே தெரிய, அத்துடன் பூமியின் எல்லையே முடிந்து விடுவது போன்ற பிரமையை ஏற்படுத்தியது.



காஞ்சியின் பொக்கிஷப் பேழைகள் நிறைந்த ரதத்துடன் காடவ வீரர்கள் பின் தொடர, தூரத்தில் வந்து கொண்டிருந்த கண்டகோபாலன் அனுப்பிய புரவிப்படைப் பிரிவைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே அந்தப் பாதையில் விரைந்து கொண்டிருந்தான் காடவராயன். சம்புவரையர் நாட்டு எல்லையிலிருந்த அந்தப் புஷ்பகிரியின் அடிவாரத்தில் வீரசம்பனின் படைப் பிரிவு பாசறை அமைத்திருப்பதை அறிந்திருந்தான் அவன். அதை அடைந்துவிட்டால் பின் தொடரும் காஞ்சியின் புரவி வீரர்களை அழித்துவிடுவது எளிது என்றும் தீர்மானித்திருந்தான். ஆனால் வலப்புறமாகச் சுழன்று இறங்கிய பாதையில் சென்று; பாறைகளின் மறைவைத் தாண்டியதும், எதிரே விரிந்த காட்சியைக் கண்ட காடவராயன் திகைப்பில் உறைந்து போனான்.

மலையின் மறுபுறத்திலிருந்து தொடங்கி, வெகு தூரம் வரையிலும் கூடாரங்கள் பல தெரிந்தன. புரவிகளும், வீரர்களும், களிறுகளும்,

பளபளத்த வாட்களும் வேல்களும் ஏராள மாகத் தெரிந்த அந்தப் பாசறை, நிச்சயம் வீரசம் பனின் பாசறை அல்ல என்பது பார்த்ததும் புரிந்தது காடவராயனுக்கு. முகப்பிலிருந்த பெரும் கூடாரத்தின் மீது அவனை விழுங்கி விடத் துடித்த மீன் கொடியைக் கண்ட காடவ ராயனின் இதயம், அந்தக் கொடியைவிட வேகமாகப் படபடத்தது. கொங்கு நாட்டில் போசளருடனான போரை போசள வீர சோமேஸ்வரனின் வீர மரணத்துடன் முடித்து வைத்த ஜடாவர்ம சுந்தரபாண்டியன், அதே வேகத்தில் வடகிழக்காக நகர்ந்து பாலாற்றை அதன் ஆரம்பக் கட்டத்திலேயே கடந்து, காஞ் சியை நோக்கி வந்து கொண்டிருப்பதை அது வரை அறிந்து கொள்ளாத காடவராயனுக்கு எதிரில் விரிந்த காட்சி வெறும் பிரமையோ என்ற சந்தேகத்தையும் ஏற்படுத்தியது.

அவன் பிரமையை உடைக்க கூடாரத்தி னுள்ளிருந்து வெளியே வந்தார் ஓர் ஆஜானு பாகுவான மனிதர். அவர் கனத்த வாளைப் பார்த்தான். கட்டுக்கடங்க விரும்பா முரட்டுப் புரவியொன்றின் மீது ஏறி, தன்னை நோக்கி அவர் வரத் தொடங்கியதையும் கண்டான். காடவராயனுக்கு இனி தான் கொண்டு வந்த ரதமோ, ரதத்தினுள்ளிருந்த பேழைகளோ அத் தனை முக்கியமல்ல என்பதும், தான் உயிர் பிழைப்பது மட்டுமே அதிமுக்கியம் என்பதும் புரிந்தது. ரதப் புரவியை விடுவித்துத் தாவியவன், பக்கவாட்டில் திரும்பி புஷ்பகிரி யின் அடர்ந்த காட்டுப் பகுதியை நோக்கித் தலைதெறிக்க விரைந்தான்.

காடவ வீரர்கள் தங்கள் தலைவனின் அந்த அபார ஓட்டத்தை ரசிக்கவில்லையென்றாலும் எதிரில் வந்து கொண்டிருப்பது அதுவரை தங்கள் வாழ் நாளில் சந்தித்திராத அபாயம் என்பதை உணர்ந்து கொண்டதால் முற்பிறவி யில் தாங்கள் மான்களாகப் பிறந்திருந்ததை நிரு பிப்பது போல் காடவராயனைத் தொடர்ந்து காட்டுப் பகுதிக்குள் பாய்ந்தனர். பேழைகளைச் சுமந்த ரதம் மட்டும் ஒற்றைப் புரவியுடன் அந்த மலைப்பாதையில் தனித்து நின்று கொண்டிருந் தது.

---

"நீ மட்டும் எப்படிடா நம்ம ஆசிரியர் கிட்ட நெருங்கி, தைரியமா பழகறே?"

"நானும் அவரும் ஒண்ணா படிச் சோமே!"

— பா. ஜெயக்குமார்.



ரதத்தை நெருங்கி, அதில் கிடந்த பேழை களையும், பேழைகளின் மீது தெரிந்த காஞ்சி யின் முத்திரைகளையும், காட்டுக்குள் ஓடி மறைந்த காடவ வீரர்களையும் கவனித்த கிருஷ்ணமல்லர், நடந்தவற்றை கணப்பொழு தில் யூகித்துக் கொண்டார். அவர் யூகத்தில் ஏதும் சந்தேகமிருந்தால் அதைப் போக்க சற்றுத் தூரத்தில் கண்டகோபாலனின் புரவி வீரர்கள் கனவேகமாக வந்து கொண்டிருந்தனர்.

மீண்டும் கூடாரங்களை நோக்கித் திரும்பிய கிருஷ்ணமல்லர், கூடார வாயிலில் தனது உத்தரவுக்காகக் கரங்களைக் கட்டியபடி காத் திருந்த தமது அருமைச் சீடன் ஒப்பிலிமல்ல னையும் அவன் சகாக்களையும் சைகையால் அழைத்தார். சீடர்கள் நெருங்கியதும், "ஒப்பிலி, அதோ வருபவர்கள் கண்டகோபாலனின் வீரர் கள். கவனித்துக் கொள்" என்று உத்தரவிட்டு விட்டு, திரும்பியும் பாராமல் தமது முரட்டுப் புரவியைச் செலுத்திக் கொண்டு பாண்டிய மன்னனிருந்த கூடாரத்தை நோக்கி விரைந்தார்.

அவர் மன்னன் கூடாரத்தில் நுழைந்த போது, ஜடாவர்ம சுந்தர பாண்டியன் பக்கச் சீலையினருகில் நின்று கொண்டிருந்தான். மன்னனின் சிங்க விழிகளில் தெரிந்த கேள்வி யைப் புரிந்து கொண்ட கிருஷ்ணமல்லர், "மன்னவா, காடவராயன் தப்பியோடி விட் டான்!" என்றார்.

"பார்த்தேன்" மன்னன் பதில் சுருக்கமாக வந்தது.

"இளைய பாண்டியரை கண்டகோபாலன் சந்திக்கும் முன்பாக காடவன் இந்தக் கொள் ளையை நடத்தியிருக்க வேண்டும் மன்னா. காஞ்சியின் பொக்கிஷப் பேழைகள் ரதத் திலிருக்கின்றன."

ஆமென்பதற்கடையாளமாகத் தலை யசைத்த மன்னன், "படைத் தலைவரே, இனி நாம் பாசறையைக் கலைத்துப் புறப்படலாம். வீரபாண்டியனுக்கு மல்லைத் துறைக்குச் செல்லு மாறு ஓலையனுப்பி விடுங்கள். கொற்கையி லிருந்தும் நாகையிலிருந்தும் கலங்கள் மல் லைக்கு வந்து சேர்ந்திருக்கும். தஞ்சைத் துறவி யாருக்கும் காஞ்சிக்கு வர ஓலையனுப்பி விடுங்கள்" என்று உத்தரவிட்டான்.

திருப்தியுடன் தலையசைத்துக் கொண்ட கிருஷ்ணமல்லர், மன்னனை வணங்கி வெளி யேறினார். வாயிலிலேயே கைகளைக் கட்டிய படி நின்றிருந்தான் சீடன் ஒப்பிலி மல்லன். அவரைக் கண்டதும் தலைதாழ்த்தியவன், "கண்டகோபாலன் வீரர்களைக் கவனித்து விட்டேன் பிரபு" என்றான்.

"சரி, கூடாரங்களைக் கலைத்து விட்டு வீரர் களை அணிவகுக்கச் சொல். நாம் காஞ்சியை நோக்கிக் கிளம்புகிறோம்" என்றார் கிருஷ்ண மல்லர்.

**அ**ரிய பொருள் ஒன்றை இழந்து மீண்டும் திரும்பப் பெறும் போது இன்பம் இருமடங்காக உயர்ந்து விடுகிறது என்பதைக் காஞ்சிமாநகரின் மக்கள் உணர்ந்தார்கள். கண்டகோபாலனின் அதிகாரமும், முரட்டுத்தனமான ஆட்சியும் நீங்கி மீண்டும் தமிழ் மன்னன் ஒருவன் ஆட்சி மலர்வதை வரவேற்ற மக்கள், மாவிலைத் தோரணங்களும், பந்தல்களும், இல்லங்களின் வாசல்களின் வண்ணக் கோலங்களும், நகரை அலங்கரிக்க, பாண்டிய மன்னனை வரவேற்க ஆயத்தமானார்கள். பாவலர்கள் கவியிசைக்க, அவற்றைக் காஞ்சியின் ஆலயத்துச் சுவர்களில் பொறிக்க சிற்பிகள் தயாரானார்கள். எந்த சேதமுமின்றி காஞ்சி நகரைக் கைப்பற்றிய ஜடாவர்ம சுந்தர பாண்டியன், மாறன் அமுதனார் குறித்த முகூர்த்தத்தில் பட்டினப் பிரவேசம் நடத்தி முடி சூடவும் செய்தான். பெரும் புலிக்கொடி பறக்க, சோழ மன்னனின் பவனி ரதத்திலேயே வந்து இறங்கிய தஞ்சைத் துறவியாரைக் கண்டதும் சுந்தர பாண்டியன் காஞ்சி அரியணையில் அமர்வது பற்றி எவருக்கேனும் ஆட்சேபமிருக்குமானால் அது அடியோடு நீங்கியது.

அத்தாணி மண்டபத்தில் தனக்கும், மாறன் அமுதனாருக்கும் இணையாக துறவியாருக்கும் ஒரு ரத்னாசனமளித்திருந்தான் பாண்டிய மன்னன். அரியணையேறியதும் முதலில் கண்டகோபாலனிடமிருந்து மீட்ட செல்வங்களைப் பிரதானிகளிடம் அளித்தான். சோழ மன்னர் முன்பு விதித்திருந்தவை நீங்கலாக, பிறகு விதிக்கப்பட்ட வரிகள் அனைத்தையும் நீக்கி விடுவதாகவும், ஆலயங்களுக்கு இன்னும் சில நிலங்களையும் மானியங்களையும் அளிப்பதாகவும் அறிவித்து, கல்தச்சர்களைக் கொண்டு அவற்றை ஆலயச் சுவர்களில் பொறிக்கவும் உத்தரவிட்டான்.

**ச**டங்குகளையும் அனைத்து சம்பிரதாயங்களையும் முடித்து மன்னன், அரண்மனைக்குத் திரும்பியபோது முதல் ஜாமம் தொடங்கியிருந்தது. சந்தியா காலக் கடன்களை தாமதமாகவே செய்து முடித்து, கூடத்தினுள் நுழைந்த மன்னன், மாறன் அமுதனார் காத்திருப்பதையும், என்றும் கவலையைக் கண்டறியாத அவர் முகத்தில் கவலையின் ரேகைகள் தென்படுவதையும் கவனித்தான். அதன் காரணத்தை யூகித்து விட்டதால் முறுவல் ஒன்றைப் படரவிட்டபடியே அவர் எதிரில் வணங்கி அமர்ந்தான். மன்னனை ஏறெடுத்து நோக்கிய அவர் விழிகளிலும் கவலை தெரிந்தது. "சுந்தரா, ஆதித்யனைப் பற்றி செய்தி ஏதேனும் வந்ததா?" என்றார் குரலிலும் கவலை தொனிக்க.

மன்னன் பதில் கூறுமுன்பாக வாயிலிலிருந்து கிருஷ்ணமல்லரின் கனத்த குரல் சலிப்புடன் ஒலித்தது. "என்ன வீரன் இவன்? வாளைப் பிடித்துச் சுழற்ற வலுவற்றவனுக்குச் சிற்றரசன் என்ற பட்டம் எதற்கு?" சலிப்புடன் இரைந்து கூறியபடியே உள்ளே நுழைந்தவர், மன்னனும் அமுதனாரும் அமர்ந்திருப்பதைக் கண்டு குரலைத் தாழ்த்திக் கொண்டார். துறவியாரும் ஏதோ விவாதித்தபடி பின்னால் நுழைந்தார்.

"படைத்தலைவரே, என்ன நேர்ந்தது?" விசாரித்தான் மன்னன். துறவியாரையும் எழுந்து வரவேற்றான்.

"பெரிதாக ஒன்றுமில்லை மன்னா. சிறைச்சாலை வரை சென்று வந்தேன்" என்றார் கிருஷ்ணமல்லர் சலிப்புடன்.

"ஆனாலும் உன் படைத்தலைவருக்கு இத்தனை முரட்டுத்தனம் ஆகாது மன்னா" - பாண்டிய மன்னனிடம் முறையிட்டபடியே இருக்கையில் அமர்ந்தார் துறவியார்.

மன்னன் விழிகள் கிருஷ்ணமல்லரை நோக்கித்திரும்பின. "மன்மசித்தனை சந்தித்தீர்களா படைத்தலைவரே?" என்ற கேள்வியும் உதிர்ந்தது மன்னனிடமிருந்து.

"ஆம், மன்னா. கண்டகோபாலனால் சிறை வைக்கப்பட்டவன் இப்போது விடுவிக்கும்படி வேண்டினான். மறுத்து விட்டேன்."

"பிறகு?"

"என்னிடம் தனிப்பட போரிட்டு,நான் வென்றால் விடுவிப்பீர்களா என்றும் கேட்டான்."

மன்னன் சற்றே நகைத்தான். மன்மசித்தனுக்குத் துணிவு அதிகம்தான்" என்றவன், "பிறகு?...." என்று வினா எழுப்பினான்.

துறவியார் மீண்டும் முறையிட்டார். "மன்னா, நான் எத்தனை கூறியும் இவரைத் தடுக்க முடியவில்லை. சிறைக்கதவுகளைத் தாமே சென்று திறந்து விட்டார்!"

"ஆமாமாம், வீரனின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியது தமது கடமை என்று நமது



(நெடுநேரமாக சாப்பிடக் காத்திருந்தவர்)

"எங்க ஆபீஸிலே மதிய இடைவேளை ஒரு மணி நேரம்தான்."

"இந்தப் பிரச்னையையெல்லாம் உங்க நிர்வாகத்துகிட்டே பேசித் தீர்த்துக்குங்க!"

— குல்லு

படைத்தலைவர் எண்ணியிருப்பார்!" என்றான் மன்னன் புன்முறுவலுடன்.

கிருஷ்ணமல்லர் சற்றுத் தயங்கி துறவியாரின் முகத்தைப் பார்த்துவிட்டுக் கூறினார்: "சிறையின் கதவுகளைத் திறந்ததுமே அவன் எதிர்பாராத விதமாக ஒரு காவலனின் வாளைப் பிடுங்கிக் கொண்டு என் மீது பாய்ந்து விட்டான், மன்னா! வாளை எடுக்கவும் எனக்கு அவகாசமளிக்கவில்லை!"

"அடடா! அப்புறம்?"

துறவியார் தொடர்ந்து கூறினார்: "நான் எதிர்பார்த்தபடியே ஆயிற்று மன்னா. வாளைப் பிடித்த அவன் கரத்தை படைத்தலைவர் தடுத்துப் பிடித்த வேகத்திலேயே அவன் கரம் முறிந்து விட்டது மன்னா! முறிந்த கரத்தை இவர் இன்னும் முரட்டுத்தனமாக இழுத்து வாளைப் பறித்ததில் தோளிலும் முறிவு ஏற்பட்டுவிட்டது!"

மன்னன் இளநகை புரிந்தான். "கிருஷ்ண மல்லரே! யானை பலத்தை உங்கள் தோள்களில் இப்படி நீங்கள் ஒளித்து வைத்திருக்கலாமா? அதனால் எத்தகைய விபரீதம் பாருங்கள்!"

கிருஷ்ணமல்லரின் குரல் சங்கடத்துடன் ஒலித்தது: "மன்னிக்க வேண்டும் மன்னா. சற்று உணர்ச்சிவசப்பட்டு விட்டேன். மற்றபடி நமக்கு நேரிடையான எதிரியில்லாத அவனைத் துன்புறுத்தும் நோக்கம் ஏதும் எனக்கில்லை. உடனே மருத்துவரையும் சென்று கவனிக்குமாறு கூறி அனுப்பிவிட்டேன்."

அத்துடன் அந்த உரையாடலுக்கு முற்றுப் புள்ளி வைக்க விரும்பிய அமுதனார், "சுந்தரா, ஆதித்யனைப் பற்றி ஏதேனும் செய்தி வந்ததா?" என்றார் ஈவலை தொனித்த குரலில் மீண்டும்.

துறவியாரிடமிருந்து பதில் வந்தது: "அமுதனாரே! ஆதித்யனைக் குறித்து கவலைப்பட ஏதுமில்லை. தாக்குதலைத் தொடங்க யாதவ கிருஷ்ணனுக்கு ஓலையனுப்பி விட்டேன். இளைய பாண்டியர் மல்லைத் துறையிலிருந்து கலங்களுடன் புறப்பட்டாகி விட்டது. நாமும் நாளைக்காலை காளத்தியை நோக்கி நம் வீரர்களை அணிவகுத்து அனுப்பலாம். கிருஷ்ண மல்லரும் தயாராக இருக்கிறார்."

துறவியார் வெகு சகஜமாகக் கூறினாலும் அவரது சொற்களுக்குள் அடங்கியிருந்த போர்த்திட்டம் மாறன் அமுதனாருக்குப் பெரும் திருப்தியை அளித்து விட்டதால் அவரது முகத்திலிருந்த கவலை மறைந்து திருப்தி நிலவத் தொடங்கியது.

இறுதியாக கிருஷ்ணமல்லர் ஒரு சந்தேகம் கேட்டார்: "மன்னவா, காஞ்சியின் செல்வங்களை மீண்டும் கொண்டு வந்து சேர்த்துவிட்டோம். கண்டகோபாலனின் மகளை அவன்

உறவினரிடம் ஒப்படைக்க வேண்டாமா?"

மன்னன் முகத்தில் இலேசாக விஷமம் படர்ந்தது. "அவசியமில்லை படைத்தலைவரே. அவளுக்குப் பாண்டியருடன் புது உறவுகள் ஏற்பட்டுவிட்டன. எனவே இனி அவள் நம்மைச் சேர்ந்தவள். திருப்பியனுப்புவது சாத்தியமல்ல" என்றான் மன்னன்.

படைத்தலைவர் முகத்தில் மட்டுமின்றி துறவியாரின் விசால விழிகளிலும் கூட வியப்பு தெரிந்தது. "மன்னர் கூறுவது விளங்கவில்லை. கண்டகோபாலன் மகளுக்குப் பாண்டியருடன் உறவா?" என்றார் கிருஷ்ணமல்லர்.

"ஆம் படைத்தலைவரே, சந்தேகமிருந்தால் அதோ அந்த சாளரத்தினருகில் சென்று பாருங்கள்" - மன்னன் பதிலில் இன்னும் விஷமம் தொனித்தது.

விடுவிடுவென்று சாளரத்தையடைந்து வெளியே நோக்கிய கிருஷ்ணமல்லர், பலமாக நகைத்தார். அந்தப்புரத்தை நோக்கிச் சென்ற பாதையின் வளைவிலிருந்த செண்பக மரத்தினடியில் அமர்ந்து உலகையே மறந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தாள் ஸ்வர்ணமுகி. அவளையும், அவள் கிள்ளைத் தமிழையும் ரசித்தபடி எதிரில் நின்றிருந்தான் யுவான். கிருஷ்ணமல்லரின் பலமான நகைப்பு இருவரையும் திரும்பி நோக்க வைத்தது.

கிருஷ்ணமல்லரின் பின்னாலிருந்து மன்னனின் குரல் திடமாக ஒலித்தது. "படைத்தலைவரே, இதில் நகைப்பதற்கு ஏதும் இல்லை. யுவான் நம்மைச் சேர்ந்தவன். தந்தையையும் அரசையும் இழந்த ஸ்வர்ணமுகிக்கு அவள் உறவினரிடம் சென்றாலும் சீரான வாழ்வு அமைவது சந்தேகம். இயற்கை வேகங்களும் கலையில் இருவருக்கும் உள்ள நாட்டமும், இந்தப் போரின் சந்தர்ப்பங்களும் இருவரையும் இணைத்திருக்கின்றன. யுவானும் நேற்றே இதைப் பற்றி என்னிடம் தெரிவித்து அனுமதி கேட்டான். நம்மைச் சேர்ந்தவர்களுக்கு நம் ஆதரவைத் தருவதுதான் முறை" என்றான் மன்னன்.

அயல் நாட்டவனை மட்டுமின்றி எதிரிகளைச் சேர்ந்தவர்களையும் கூடத் தம்மைச் சேர்ந்தவர்களாக எண்ணும் பாண்டிய மன்னனின் உயர்ந்த உள்ளத்தைப் புரிந்து கொண்டதால் அந்த அறையிலிருந்தவர்கள் மனத்தில் சந்துஷ்டி நிலவியது.

காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பையும் நிர்வாகத்தை சீர் செய்யும் பணியையும் யுவானிடம் ஒப்படைத்து அவனைக் காஞ்சியிலேயே இருக்க உத்தரவிட்ட பாண்டிய மன்னன், மறுதினமே படைகளை அணிவகுத்து காளத்தியை நோக்கிச் செல்ல உத்தரவிட்டான்.

(தொடரும்)

பரபரப்பான கோபாலபுரம் நான்காவது தெரு. முதல்வர் குடியிருக்கும் அதே தெருவில் தான் குடியிருக்கிறார் மு.க. முத்து. அடித்தளத்தையும், முதல்தளத்தையும் வாடகைக்கு விட்டுவிட்டு இரண்டாவது மாடியில் இரண்டு அறைகள் கட்டி, அதில் குடியிருக்கிறார். திறந்த மார்புடன், லுங்கியோடு, நம்மை வரவேற்கும் முத்துவுக்கு, ஐம்பது வயது நெருங்கினாலும் இன்னமும் இளமை மிச்சமிருக்கிறது.

"ரொம்ப நாட்களாக உங்களைப் பற்றி செய்தி ஏதுமில்லை. திடீரென்று, ஸ்டாலினுக்கு எதிராக அ.தி.மு.க. சார்பில் போட்டியிடப் போவதாகச் செய்திகள் அடிபட்டனவே!"

"உங்களுக்கு அந்தச் செய்தி எப்படி ஆச்சர்யத்தைக் கொடுத்ததோ அதுபோன்ற நிலைதான் எனக்கும். பல மாதங்களாக நான் ஜெயலலிதா அவர்களைச் சந்திக்கவேயில்லை. அ.தி.மு.க. விலும், தீவிர ஈடுபாட்டுடன் இல்லை. அந்த நிலையில் இந்தச் செய்தி எப்படிக் கிளம்பியது என்பது புதிர். ஒருவேளை, என் அப்பாவை (கலைஞர்) சங்கடப்படுத்துவதற்காக யாராவது இந்தச் செய்தியை விதைத்திருக்க வேண்டும்."

"அப்பாவைச் சங்கடப்படுத்துவது என்றால்..."

"எனக்கும் என் அப்பாவுக்கும் உறவு சரியாக இல்லை என்பது தெரிந்த விஷயம். நான் மீண்டும் அப்பாவுக்கு நெருக்கமாக ஆகக் கூடாது என்பதற்காக, "சிலர்" இந்தச் செய்தியைக் கிளப்பி விட்டிருக்கலாம் அல்லவா?"



## — மனம் திருந்திக் கேட்கிறார் மு.க. முத்து

"இப்போது நீங்கள் அ.தி.மு.க.வில் இருக்கிறீர்களா?"

"இத்தனை வயதாகியும் வாழ்க்கையில் இன்னமும் செட்டில் ஆகவில்லையே என்ற ஆதங்கத்தின் காரணமாக, பல அவசர முடிவுகளை எடுத்துவிட்டு, அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அந்த அடிப்படையில், 1989-ல் அப்பா ஆட்சிக்கு வந்தபோது கிரானைட் வியாபாரம் செய்யலாம் என்று அப்பாவை அணுகினேன். ஆனால், எனக்கு உதவி செய்தால் ஏதாவது சர்ச்சை வருமே என்ற காரணத்தால் அப்பா எந்த உதவியும் செய்யவில்லை. அந்தக் கோபத்தில் இருந்த என்னை, இப்போது பிரிந்து வாழும் என் மனைவி (சிதம்பரம் ஜெயராமன் மகள்), லீலாவதி (எம்.ஜி. ஆருக்கு கிட்னி கொடுத்தவர்) மற்றும் எஸ்.டி.எஸ். ஆகியோர் வலியுறுத்தி அ.தி.மு.க.வில் சேர்த்தார்கள். 1991-ல் அ.தி.மு.க. பதவிக்கு வந்தபோது திரைப்பட வளர்ச்சி நிறுவனத் தலைவர் பதவி கொடுக்க வேண்டி ஜெ.வை அணுகினேன். அவர் கொடுக்கவில்லை. ஆனால் ஐந்து லட்ச ரூபாய் கொடுத்தார். அதற்காகப் பல மேடைகளில் அப்பாவைத் திட்டினேன். மற்றவர்கள் திட்டும்போது கேட்கக்கூடிய நிலையில் வைக்கப்பட்டேன். அதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது 'எப்படிப்பட்ட தவறுகள் செய்து விட்டோமென்று' எண்ணத் தோன்றுகிறது. அதன் காரணமாக இப்போது குற்ற உணர்வோடு தடுமாறிப் போகிறேன். எம்.ஜி.ஆருக்கு என்னிடம் இருந்தது போன்ற பாச உணர்வெல்லாம் ஜெ.க்கு கிடையாது. என் அப்பாவை அவமானப்படுத்த என்னைப் பயன்படுத்திக் கொண்டார் அவர்."

"ஸ்டாலின் இப்போது மேயர் தேர்தலில் போட்டியிடுவதைப் பற்றிப் பலமான சர்ச்சை அடிபட்டுக் கொண்டிருக்கிறதே?"

"ஸ்டாலின் என் சகோதரன் என்பதற்காகச் சொல்லவில்லை. துவக்க காலத்தில் அப்பா, ஸ்டாலினை வளர்க்க விரும்பியிருக்கலாம். ஆனால் மிசாவில் அடிபட்டு, உதைபட்டு அரசியலில், ஒரு கட்டத்துக்கு அப்புறம், தானே

வளர்ந்தவன் ஸ்டாலின். இன்னமும், வளரு வான். அரசியலில் அவனுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. எனக்குக் கூட அப்பா நல்ல பாதையைக் காட்ட நினைத்தார். ஆனால் நேரம் சரியில்லை. வாய்ப்புகளை நான் சரியா கப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ஒருவரை மற்றொருவர் எப்போதும் 'புஷ்' செய்து கொண் டிருக்க முடியாது. சொந்தத் திறமை, நேரம் ஆனால் அப்பா, வை.கோ. உட்பட நிறைய பேரை அரசியலில் வளர்த்து விட்டிருக்கிறார். அவர்களில் பலர் முதுகில் குத்திவிட்டுப் போயிருக்கிறார்கள். அவர்களில் சிலரை, பெருந்தன்மையாக மன்னித்து ஏற்றுக் கொண்டிருக்கிறார். அப்படிப்பட்ட பண்பான ரான அப்பா, என் தவறுகளை மன்னித்து என்னை ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது?

# அப்பா என் தவறுகளை மன்னிக்கக் கூடாதா?

> "பல மேடைகளில் அப்பா வைத் திட்டினேன். மற்றவர்கள் திட்டும் போது கேட்கக்கூடிய நிலையில் வைக்கப்பட்டேன். அதை யெல்லாம் நினைத்துப் பார்க் கும்போது 'எப்படிப்பட்ட தவறுகள் செய்து விட்டோ மென்று' எண்ணத் தோன்றுகிறது. அதன் காரணமாக இப்போது குற்ற உணர்வோடு தடுமாறிப் போகிறேன்."

எல்லாம் ஒத்துவர வேண்டும் அந்த வகை யில் ஸ்டாலினின் வளர்ச்சி சுயமான முயற்சி என்று சொல்ல லாம்."

"இந்த முறை ஆட் சிக்கு வந்ததும் அப்பா வைப் பார்த்தீர்களா?"

"அவரைப் பார்த்து ஆறு வருடங்கள் ஆகி விட்டன. எனது பாட்டி (கலைஞரின் தாயார்) என்னிடம் மிக அன்பாக இருந்தவர். அடுத்து பேரறிஞர் அண்ணா அவர்கள். 'தாயில்லா பிள்ளையாயிற்றே' என்று பாசத்துடன் உச்சிமுகர்ந்தவர். காஞ்சிபுரத்தி லிருந்து கார் அனுப்பி கூட்டி வரச் சொல்லு வார். அடுத்து எம்ஜி.ஆரிடம் பாசப் பிணைப்பு உண்டு. இப்போது வாரிசு அரசியல்; குடும்ப அரசியல் என்றெல்லாம் சொல்லுகிறார்கள்.

சமீபத்தில் பங்காரு அடிகளாரைச் சந்தித் தேன். பார்த்தவுடன் அவர் சொன்னார் : 'நீயும் உன் அப்பாவும் விரைவில் ஒன்று சேர் வீர்கள்.'

குடும்பம் ஒன்று பட்டு இருக்க வேண்டும் என்ற ஆர்வத்தின் கார ணமாக எங்களைச் சேர்த்து வைக்க நல்ல வர்கள் சிலர் முயற்சி செய்கிறார்கள். ஆனால் ஜெ.யிடம் வாங்கிய ஐந்து லட்சம் ரூபாயைத் திருப்பிக் கொடுக்கச் சொல்லுங்கள் என்கிறாராம். நான் எங்கே போவேன்? வரும் வாட கையை வைத்துத்தான் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். அப்பா தான் அந்த ஐந்து லட்சத்தை எனக்குக் கொடுக்க வேண்டும்."

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

போட்டிக்கதை - 4

தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கும் முயற்சியில் லண்டன் சென்றிருந்த என் மைத்துனர், அங்கிருந்து எனக்கொரு கடிதம் எழுதியிருந்தார்.

மதுரையிலுள்ள கல்லூரியொன்றில் பொருளாதாரப் பேராசிரியராகப் பணியாற்றி, ஓய்வு பெற்றுள்ள டாக்டர் ராம் சென்னுக்கு, அவர் ஆங்கில மொழியில் எழுதியுள்ள "உலகில் பசியை ஒழிப்போம்" என்ற நூலின் சிறப்பைப் பாராட்டி ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டியின் பொருளாதாரப் பேராசிரியர்கள் பெரிதும் புகழ்வதாகவும், விரைவில் அவரை அங்கு அழைத்துப் பாராட்டு விழா நடத்தவிருப்பதாகவும் தெரிவித்திருந்தார். இந்தச் செய்தி இந்தியாவில் யாருக்கும் இதுவரை தெரியாதெனவும் குறிப்பிட்டிருந்தார்.

கடிதத்தைப் படித்து முடிக்கும்போது, என் நண்பர் மணி வந்து சேர்ந்தார். அவரிடம் டாக்டர் ராம்சென் பற்றிய விவரத்தைத் தெரிவித்துக் கடிதத்தையும் காட்டினேன். "ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் பாராட்டுவதற்குள், நாம் நம் ஊரிலிருக்கும் டாக்டரை, நமது எழுத்தாளர் சங்க ஆண்டு விழாவில் பாராட்டிப் பரிசளிக்கலாமே!" என்று என் மனதிலிருந்ததைப் பிடித்தாற்போலக் கேட்டார் மணி.

அவர் பணியாற்றிய கல்லூரிக்குக் கிளம்பினோம்.

அங்கிருந்த பணியாளிடம், "டாக்டர் ராம்சென் இங்கதானே பணியாற்றினார்...? அவரை நாங்க பார்க்கணும். அவர் இப்போ எங்கே இருக்கார்? தெரியுமா?"

"ஓ!... புரபஸர் ராமச்சந்திரனையா...? அவர் பணி ஓய்வுபெற்று ரொம்ப கால மாச்சு. இப்ப அவர் என்ன பண்றார்? எங்கிருக்கார்னு சரியாத் தெரியலை. தெற்கு மாசி வீதி-கீழ மாசி வீதிச் சந்திப்புக்குப் பக்கத்துல, ஒரு பிள்ளையார் கோவில் இருக்கு. அதுக்குப் பக்கத்திலுள்ள சந்துல ஒரு வீட்லதான் இருந்தார். அங்க போயிக் கேட்டாச் சொல்லுவாங்க" என்றார்.

"அவரைப் பற்றிய விவரங்கள் சில தெரியணும். வேற யாரிடம் கேட்டாத் தெரியும்?" இப்ப இருக்கிற புரபசரிடம் கேட்டாத் தெரியுமா?"

"இப்ப... இங்க... சாரங்கபாணின்னு ஒருத்தர், எக்கனாமிக்ஸ் புரொபசராயிருக்கார். இவர் ராம்சென்ட்ட ஜூனியரா இருந்தவர். கேட்டாத் தெரியும்" என்று கூறி, அவர் இருக்கும் அறையை நோக்கிக் கைகாட்டினார்.

அவர் பெயர் ராமச்சந்திரன் என்பதும், அதுதான் 'ராம் சென்'னாகச் சுருங்கியிருக்கிறதென்றும் தெரிந்து கொண்டோம்.

பொருளாதாரப் பேராசிரியரின் திறந்திருந்த அறைக்குள் தயங்கியபடி நுழைந்தோம். சுமார் நாற்பத்தைந்து வயது மதிக்கத்தக்க - வாட்டசாட்டமான ஒருவர் சூட், கோட்டணிந்து, கம்பீரமாக அமர்ந்திருந்தார். எதையோ படித்துக் கொண்டிருந்த அவர், எங்கள் வருகையை அறிந்து, "யாரது?... என்ன வேணும்?" என்றார்.

"உங்களுக்கு முன் இங்க பேராசிரியராயிருந்த மிஸ்டர் ராமச்சந்திரன் சாரைப் பற்றித் தெரிஞ்சுக்கலாம்னு வந்தோம்!" என்றேன்.

"ஓ! என்னோட சீனியரைப் பத்திக் கேக்கறீங்களா? - எதுக்காக அவரைப் பத்திக் கேக்கறீங்க? என்ன விசேஷம்?"

"அடுத்த மாசம், எழுத்தாளர் சங்க ஆண்டு விழா, நகரில் நடத்தவிருக்கோம்! அதுல கலந்துக்கும்படி டாக்டர் சாரைக் கேட்கலாமின்னு நெனைக்கிறோம். அதற்காகவே வந்தோம்!" என்றார் மணி.

"அப்படியா? அதுல நான் வந்து என்ன செய்யப் போறேன்? கூட்டங்கள்ல கலந்துக்கிறதோ, பேசறதோ எனக்குப் பழக்கமில்லை!" என்று, நாங்கள் அவரையே அழைக்க வந்ததாக நினைத்துப் பேசினார்.




"நாங்க உங்க கிட்ட வந்தது, டாக்டர் ராமச்சந்திரன் சாரைப் பத்திய சில விவரம் தெரிஞ்சுக்கலாம்னுதான். அவர் பல நூல்கள் எழுதியிருக்கிறதாகவும் அவருடைய கட்டுரைகள் பல மேல்நாட்டு ஜர்னல்களில் வெளியாகிப் பேரும் புகழும் அடைந்திருப்பதாகவும் கேள்விப்பட்டோம். எனவேதான் அவரைப் பற்றிச் சில விவரங்களை அவரது புத்தகங்களையும் வெளியான கட்டுரைகளைப் பற்றியும் உங்களிடம் கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்னுதான் வந்தோம்" என்று உடைத்துப் பேசினார் மணி.

எஸ். சங்கரநாராயணன்

தன்னையே அழைக்க வந்திருப்பதாக நினைத்துப் பெருமைப்பட்டுக் காலரை இழுத்து விட்டுக் கொண்ட புரபசரைத் தலையில் குட்டியது போல இருந்தது மணியின் பேச்சு.

அதன் பிறகே தன்னிலையடைந்தார் புரபசர். "அவரை அழைக்க... என்ன செய்யப் போறீங்க? அவர் இங்கே எனக்கு முன்னால் பேராசிரியராக இருந்த வர்தான். அவரைப் பத்திப் பெருமையாச் சொல்றதுக்கு ஒண்ணுமில்லை! கட்டுரைகள் இங்கிலீஷ் ஜர்னல்கள்லே வந்ததும் சில புக்ஸ் வெளி வந்திருப்பதும் உண்மைதான். ஆனா, அதெல்லாம் அவருடைய தில்லைங்கிறதை நீங்க தெரிஞ்சுக்கணும். அவருடைய ஜூனியரா விருந்த நான்தான் அதெல்லாம் எழுதிக் கொடுத்து, அவர் பேர்ல வெளியாகியிருக்கு... ஏதோ படிச்சுப் பாஸ் பண்ணிப் பட்டமெல்லாம் வாங்கியிருக்காரே தவிர... விஷயம் ஒண்ணுமில்லை. அவர் ஒரு மாதிரியான ஆளு. 'லூஸ் டைப்'பான ஆசாமி. அப்படிப் பட்டவரைத் தேடி நீங்க வந்ததாச் சொல்றது ஆச்சரியமா இருக்கு!"

தனது சீனியராக இருந்த ஒரு பேராசிரியரைப் பற்றித் தரக்குறைவாகப் பேசியதும், அவரிடம் திறமை, சாமார்த்தியம் எதுவுமில்லை என்று பேசியதுமல்லாமல் அவரையே ஒரு "லூஸ் டைப்" எனப் பழித்துச் சொன்னதும் மணிக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. எனவே, நைசாக அங்கிருந்து நழுவி வெளியே வந்தோம்.

நகரப் பேருந்தில் ஏறி விளக்குத் தூண் நிறுத்தத்தில் இறங்கி பிள்ளையார் கோவிலை நோக்கி நடந்தோம். அங்கிருந்த வெற்றிலை-பாக்குக் கடைக்காரரை அணுகி, டாக்டர் ராமச்சந்திரன் வீடு எங்கிருக்கிறதென விசாரித்தோம்.

"நீங்க யாரு? என்ன ஜோலியா அவரைப் பார்க்க வந்திருக்கீங்க?"

என்னைவிட, மணிக்குத்தான் அதிகக் கோபம் வந்துவிட்டது. "நாங்க எங்கிருந்து வந்தா என்ன? எதுக்குக் கேட்டால் உமக்கென்ன? தெரிஞ்சாச் சொல்லும்! விருப்பமில்லேன்னா விட்டுடறோம்" என்று வெடுக்கெனக் கூறினார்.

"அட, நீங்க என்னங்க!... ரொம்பக் கோவிச்சுக்கிறீங்க! எதுக்குக் கேக்குறேன்னா... அந்த ஆளு ஒரு மாதிரி 'லூஸ் டைப்'புங்க. அவரைத் தேடி யாரும் வர்றதில்லீங்க. யாரோடவும் பேச மாட்டாருங்க! எங்கேயாச்சும் போவாரு... வருவாரு... அவ்வளவுதான்! பெரும்பாலும் வீட்லதான் இருப்பாருங்க! அதோ தெரியுது பாருங்க, ஒரு சந்து... அதுல நுழைஞ்சு போனா வலது



பக்கமா நீலவர்ணம் பூசின ரெண்டு மாடி வீடு ஒண்ணு இருக்கும். அதுக்கு அடுத்த வீடுதான் அவரோட வீடு."

"அப்படியா? ரொம்ப நன்றி!" என்று கூறிக் கடைக்காரரிடமிருந்து விடுபட்டு, குறுகலான சந்து வழியே நடந்தோம். அழகிய மதுரை மாநகரின், திருமிகுந்த தெற்கு மாசி வீதிக்கே




''ரகசியம் சொல்றேன்னு சொல்லி எல்லார் காதையும் கடிச்சிடறீங்களாமே ஏன்?''
''அது ஒரு ரகசியம் டாக்டர். உங்க கிட்டே மட்டும் சொல்றேன். கிட்டே வாங்க!''
— ஆரணி யுவராஜ்

அந்தச் சந்து ஒரு திருஷ்டி பரிகாரம் போல இருந்தது. வீட்டோரங்களில் சாக்கடை நீர், சரியில்லாத வாய்க்கால்களில் வழிந்தோடி நடக்கவே சங்கடமாக இருந்தது. அதோடு, சிறுவர் சிறுமியர் வேறு காலைக் கடன்களை அங்கேயே கழித்து, அசுத்தப்படுத்தியிருந்தனர். இரண்டொரு தினங்களுக்கு முன் பெய்த மழைநீர் வேறு, குண்டுங்குழியுமான இடங்களில் தேங்கி, கொசுக்கள் மொய்த்தபடி இருந்தன. வெகு ஜாக்கிரதையுடன் வேட்டியைத் தூக்கிப் பிடித்தபடியே நடந்தோம்.

கூடகோபுரத்தை அடுத்திருக்கும் குச்சு வீடு போல, நீலவர்ணம் பூசிய அழகிய மாடி வீட்டின் அருகே பழங்காலக் குகை போலிருந்த அவர் வீட்டைக் கண்டுபிடித்தோம். உலகெலாம் புகழ் ஒளி பரவிப் பிரகாசிக்கும் பொருளாதார மேதையான அவர், காற்றுக் கூட நுழைய முடியாத குகை போன்ற இந்த வீட்டிலா வசிக்கிறார்? நினைத்துப் பார்க்க சங்கடமாக இருந்தது எனக்கு.

பூட்டியிருந்த வீட்டினுள் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தோம். இருண்டு கிடந்ததே தவிர, யாரும் உள்ளே இருப்பது போலத் தெரியவில்லை. என்ன செய்வது? யாரிடம் கேட்கலாம்? என்று அக்கம் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, நீலவர்ணமிட்ட வீட்டிலிருந்து கதவைத் திறந்து ஒருவர் எட்டிப் பார்த்தார். நாங்கள் நிற்பதைக் கண்டு இகைத்தவர், உள்ளே சென்று கதவை மூடிக் கொள்வாரோ எனப் பயந்து "சார்!" என்று அழைத்தபடியே அவரிடம் அணுகினோம்:

"டாக்டர் ராமச்சந்திரன் வீடு இதுதானே...? பூட்டி இருக்குதே! எங்கே போயிருப்பார்?" என்று விசாரித்தேன்.

"இது அவர் வீடுதான்! எங்க போயிருப்பார்னு தெரியாது!"

"அவரோட வேற யாருமில்லையா?"

"அவர் மட்டுந்தான் தனியா இருக்கார். கூட யாருமில்லை. அவர் சம்சாரம் காலமாகி ரெண்டு வருசமாச்சு; மக ஒருத்தி திருமணமாகித் திருமங்கலத்தில், கணவரோட இருக்கா."

"மக வீட்டுக்குப் போயிருப்பாரோ...? உங்க கிட்ட எதுவும் சொல்றதில்லையா...?"

"இவரு, ஒரு மாதிரியான ஆளுங்க; 'லூஸ் டைப்'. யாரோடயும் அதிகம் பேச மாட்டார். எங்களிடம் கூட எதுவும் பேசவோ, பழகவோ மாட்டார். மக வீட்டுக்கெல்லாம் போக மாட்டார். ரிட்டயரானப்புறம்... கிடைக்கிற பென்சனை வச்சுக்கிட்டு கஷ்ட ஜீவனம் பண்றாரே தவிர, மகளிடம் போறதில்லை. இந்த வீட்டை யாருக்காவது விலைக்குக் கொடுத்துட்டு, மக வீட்ல போயி மகராசனா இருக்கலாம். அவர் மக கூட அப்படி நெனச்சு, என்ன வீட்ட வாங்கிக்கச் சொன்னா. ஆனா, இந்த ஆளு அதுக்கெல்லாம் ஒத்து வரலை. இங்கேயே கெடந்து அல்லல் படறாரு."

டாக்டர் வீட்டை வாங்க இவர் எண்ணியது நடக்கவில்லை போலும். அந்த ஏமாற்றம் கோபமாக அவர் குரலில் எதிரொலித்தது.

"தனியா இங்க இருந்தா... சாப்பிட எங்க போவார்... வருவார்?"

"கீழ மாசி வீதியில... நாடார்மேன்ஷனுக்கு எதிர்லே 'நடராச விலாஸ் ஹோட்டல்'னு இருக்கு. அங்கதான் போயிச் சாப்பிட்டு வருவார்."

**ஹோ**ட்டலைக் கண்டுபிடிக்க அதிகச் சிரமம் ஏற்படவில்லை. கல்லாப் பெட்டியருகே திடகாத்திரமான ஒருவர், சட்டை போடாமல், நெற்றியிலும், தோள்பட்டை, வயிறு, முதுகுப்புறம் போன்ற இடங்களில் மூன்று விரல் பட்டையாகத் திருநீறு பூசிக் களிப்புடன் அமர்ந்திருந்தார். அவர்தான் கடை உரிமையாளராக இருக்கும் என்றெண்ணி, அவரிடம் பேசத் தொடங்கினோம்.

''வருமானவரி அதிகாரிகள் ஏன் கோபித்துக் கொண்டு போகிறார்கள்?''
''வானம் பொழிகிறது, பூமி விளைகிறது, உனக்கு ஏன் வரி என்று டயலாக் பேசினேன்!''
— என். மோகன்





"ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை நடத்தலாம்ங்கறதுக்காக இப்படி ஒரு பொய் சொல்லக் கூடாது அவுரு..."

"அப்படி என்ன சொன்னாரு?"

"மாப்பிள்ளை ப்ளேன்ல கண்டக்டரா இருக்காருங்கறாரு!"

— டி.எஸ். திருமலைராயன்

"டாக்டர் ராமச்சந்திரன், ரிட்டையரான கல்லூரிப் பேராசிரியர் தினமும் இங்கேதான் வந்து சாப்பிடுவார்னு கேள்விப்பட்டோம். அவரைப் பார்க்கலாம்னு வீட்டுக்குப் போய் வந்தோம். வீட்ல இல்லை. பூட்டியிருக்கு. இங்கே சாப்பிட வந்திருக்கலாம்னு நெனைச்சு வந்தோம்!" என்றார் மணி அமைதியாக.

"அவர் சம்சாரம் காலமான பெறகு இங்க தான் ரொம்ப நாளாச் சாப்பிட்டு வந்தாரு. இப்பச் சில நாளா இங்க வரலை."

"மக வீட்டுக்குப் போயிட்டாரா? இங்க சாப்பிடலேன்னா, வேற எங்க போவார்?" என்றேன்.

"மக வீட்டுக்கெல்லாம் போயி நிக்க மாட்டாருங்க. கொஞ்ச நாளா உடம்பு சரியில்லாம... இங்க சாப்பிட வரவே கஷ்டப்பட்டாருங்க! நேத்துலருந்து இங்க வரலீங்க. வீட்லதான் படுத்திருக்காரோ, ஒருவேளை மக வந்து கூட்டிட்டுப் போயிருப்பாரோ தெரியலீங்க! வீட்டுக் கதவு வெளியில பூட்டு எதுவுந் தெரியுதா...? இல்லேன்னா, வீட்டுக்குள்ளாறவே இருக்கலாமுங்க" என்றார்.

எங்களுக்கும் அது சரியெனத் தோன்றியது. எனவே, போகுமுன் மீண்டும் ஒருமுறை அவரது வீடு சென்று பார்க்கலாம் என்று புறப்பட்டோம்.

மறுபடியும் அவர் வீட்டைச் சமீபிக்கும் போது மணி நாலரை ஆகியிருந்தது. அந்த வீட்டுக்கு முன்பு ஆட்கள் பலர் கூடியிருப்பதும் தெரிந்தது. காக்கி உடையணிந்த காவலர்கள் இருவரும் அவர்களுடன் அங்கு நிற்பது கண்டு திகைத்துப் போனோம்.

அருகில் சென்று விசாரித்தபோது, டாக்டர் ராமச்சந்திரன் வீட்டு மாடியிலேயே இறந்து கிடப்பதாகவும், சற்று முன்புதான் பக்கத்து வீட்டுக்காரர் மாடியிலிருந்து துர்நாற்றம் அடிப்பதைக் கண்டு, காவல் நிலையத்திற்குத் தகவல் கொடுத்ததாகவும், காவலர் வந்து வீட்டுக் கதவை உடைத்து, உள்ளே நுழைந்து பார்த்ததில் அவர் இறந்து கிடப்பது தெரிய வந்ததாகவும் கூறினார்.

டாக்டர் ராமச்சந்திரன் இறந்து கிடப்பதாக அறிந்ததும் திகைத்துப் போனோம். உடல் நலமில்லாதிருந்த அவர், நடந்து வந்து சாப்பிட முடியாமலும், கவனிக்க ஆளில்லாமலும் பட்டினி கிடந்து வாடி வதங்கிச் செத்திருக்கிறார் என்பது தெளிவாகப் புரிந்தது.

உலகத்தின் வறுமைப் பிணியைப் போக்க வழிமுறைகளை ஆராய்ந்து, புத்தகமாக எழுதிய பொருளாதார மேதை, தன் வயிற்றுப் பசி தீர்க்கும் வழிவகை செய்து கொள்ள இயலாமல் பட்டினி கிடந்து, பரிதாபமாகச் செத்துக் கிடந்தார்.

ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர்களால் பாராட்டிப் பரிசு பெறவிருந்தவர், உடன் பணியாற்றியவர்களால் உதாசீனம் செய்யப்பட்டு, அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களால் "லூஸ்" என்ற பட்டம் சூட்டப்பட்டு, இன்று நாதியற்ற பிணமாகக் கிடக்கிறார்! இது அவர் தலையெழுத்தா? அல்லது நம் நாட்டில் பிறந்ததால் ஏற்பட்ட சாபமா? — புரியவில்லை.

அவரைக் கண்டு பேசி, நடைபெறவிருக்கும் எழுத்தாளர் சங்க ஆண்டு விழாவில் அவரைக் கலந்து கொள்ளச் செய்து பாராட்டிப் பரிசளிக்க விரும்பிய நானும் நண்பர் மணியும் பெருமுயற்சி செய்து, திருமங்கலத்திலிருந்த அவர் மகளுக்குத் தகவல் தந்து, வரவழைத்து, இறுதிக் கடமைகளை உடன் இருந்து முடித்தோம். பாராட்டு விழாவுக்கு அவரை அழைக்க வந்த நாங்கள், அவரது இறுதி ஊர்வலத்தில் தான் கலந்து கொண்டோம்.

"அந்த கிராமவாசி, மானேஜரையே உத்து பார்த்துக்கிட்டு உட்கார்ந்திருக்காரே, ஏன்?"

"மானேஜரை கவனிச்சாத்தான் காரியம் நடக்கும்னு பியூன் சொன்னதை தப்பா புரிஞ்சுக்கிட்டாராம்!"

— சீர்காழி வி. ரேவதி





**ந**ரசிம்ஹ அனுஷ்டுப் மந்திரம் என்று ஒன்று உண்டு. அதிலே முப்பத்திரண்டு அக்ஷரங்கள். ஒவ்வொரு அக்ஷரமும் ஒரு பிரும்ம வித்தையை நமக்கு உபதேசம் பண்ணக்கூடியது. ஆகவே 32 பிரும்ம வித்தைகளாலும் ஆராதிக்கப்படுகிறவர் நரசிம்ஹர் என்று சொல்லலாம்.

'ஏதாவது ஒரு பிரும்ம வித்தையை நம்மால் கற்றுக் கொண்டு அனுஷ்டிக்க முடியுமா?' என்றால் அது ரொம்பவும் சிரமம். ஒன்றைக்கூட நம்மால் அனுஷ்டிக்க முடியாது.

ஆனால் நரசிம்ஹனைப் பார்த்து, ஸ்ரீ நரசிம்ஹாய நம: என்று ஒரு புஷ்பத்தைப் போட்டு அர்ச்சனை செய்ய முடியும்! அந்த நரசிம்ஹனை தியானம் பண்ண முடியும். அப்படி தியானம் பண்ணிவிட்டால் எல்லா பிரும்ம வித்தையும் கிடைத்த பலன் நமக்கு உண்டாகும். அத்தனை பிரும்ம வித்தைகளின் நிலைக்களன் அந்தப் பரமாத்மாதான்.

பூர்வ காலத்திலே தியான சுருதி என்றொருவன் இருந்தான். வாரி வாரி வழங்கும் வள்ளன்மை மிக்கவன். எல்லாருக்கும் வாரி வாரிக் கொடுப்பான். தானம், தைரியம் போன்ற குணங்கள் இயல்பாக அமையணும். அவனுக்கு அது அமைந்திருந்தது.

ஏழு அடுக்கு உப்பரிகையிலே தியான சுருதி படுத்துக்கொண்டிருந்தான். இரவு நேரம்... இரண்டு பரதேசிகள் அவனுக்கு உபதேசிக்க எண்ணினார்கள்.

# குறையொன்றுமில்லை

# 19




மூக்கூர் லக்ஷ்மிநரசிம்மாசார்யார்

வானத்தில் ஒரு ஹம்ஸ கூட்டம் (அன்னப் பறவைக் கூட்டம்) பறந்து போய்க் கொண்டிருந்தது. தாங்களும் ஹம்ஸப் பறவைகளாக மாறி கூட்டத்துடன் பறந்தனர் அவ்விருவரும். தியான சுருதி படுத்திருந்த இடத்துக்கு நேர் மேலே வந்தபோது, அவர்கள் இருவரும் பேசிக் கொண்டார்கள்.

ஒரு பறவை சொன்னது : "மந்தமான பார்வையையுடைய நண்பா! கீழே படுத்திருப்பவனைப் பார்த்தாயா...? இவன் எப்பேற்பட்டவன் என்று உனக்குத் தெரியுமா?"

மற்றது பதில் பேசியது : "இவனொன்றும் அப்படி உயர்ந்தவன் இல்லை. ரைக்குவரைக் காட்டிலும் இவன் எப்படி உயர்ந்தவனாக முடியும்."

உரையாடல் தொடர்ந்தது.

"அது யார் ரைக்குவர்?"

"உனக்கு ரைக்குவரைத் தெரியாதா? நான் காட்டுகிறேன், வா...."

படுத்திருந்த தியான சுருதி எழுந்து

விட்டான். தன்

னைக் காட்டி

லும் உயர்ந்த ரைக்குவரைத் தெரிந்துகொள்ள அவனுக்குப் பொறுக்க முடியாத ஆவல்!

'தான் ஏழு அடுக்கு உப்பரிகையில் படுத்திருந்தால் ரைக்குவர் பதினாலு அடுக்கில் படுத்திருக்க வேண்டும்' என்று எண்ணி, ஆட்களைக் கொண்டு நகரம் தோறும் தேடச் செய்தான். ஒரு நகரத்திலும் அவர் அகப்படவில்லை. பிறகு கிராமம், குக்கிராமம் என்று தேடி, ஒரு வழியாக ரைக்குவரைக் கண்டு பிடித்தார்கள்.

எங்கே?

மிகச் சிறியதொரு குக்கிராமத்தில், ஒரு சேரியில் இருந்தார் ரைக்குவர். அங்கே ஒரு கட்டை வண்டி இருந்தது. அதிலே முதுகைத் தேய்த்தபடி நின்றார்! அவர் உடல் முழுதும் புழுத்து நெளியும் புண்கள்!

தியான சுருதியினால் நம்பமுடியவில்லை. 'இவரைத் தவிர வேறு ரைக்குவர் கிடையாது' என்றதும், இரண்டு யானைகள் மீது தங்கத் தாம்பாளத்தில்

பட்டு, பீதாம்பரம், செல்வம் என்று குவித்து எடுத்து வருகிறான். அத்தனையையும் அவர் முன் சமர்ப்பித்து அனுக்கிரஹம் பண்ண பிரார்த்திக்கிறான்.

"இது அத்தனையும் ஒரு புழுவுக்குச் சமம்!" என்று தம் உடம்பிலிருக்கும் ஒரு புழுவைக் காட்டிச் சொல்கிறார் ரைக்குவர்!

"உன் நிலைக்கு இதெல்லாம் உயர்வாகத் தெரிகிறது. நான் இருக்கும் நிலைக்கு நீயும் வந்தால், என்னைப் போல்தான் நீயும் இவற்றைப் பார்ப்பாய்..." என்றார்.

"இவ்வளவு ஐச்வர்யத்தையும் புழுவாய் நினைக்கும் ஒரு நிலை இருக்கிறதா?" என்று வியக்கிறான் தியான கருதி.

"ஏன் இல்லை!"

"அப்படியானால், அதை அடைய நான் என்ன பண்ண வேண்டும்...?"

இப்படிக் கேட்ட தியான கருதியிடம் ரைக்குவர் யாரை உபாசிக்கச் சொல்லி உபதேசம் பண்ணினார் என்றால்.... நரசிம்ஹனையே உபாசிக்கும்படி உபதேசித்தார்! அவனும் அவர் சொல்படி நரசிம்ஹனை உபாசித்து மோக்ஷத்தை அடைந்தான்.

ஆக, யார் தன்னை உபாசிக்கிறார்களோ அவர்களுக்குப் பலனைக் கொடுக்கக் கூடியவன் நரசிம்ஹன்.

'அடித்த கை பிடித்த பெருமான்' என்று பெயர் அவனுக்கு! 'எங்கடா!' என்று அடித்துக் கூப்பிட்டால், 'இதோ' என்று வந்து நம் கையைப் பிடித்துக் கொள்வான். வேறு எந்த அவதாரத்திலாவது இந்த அதிசயம் உண்டா!

விச்வத்துக்குக் காரணமானவனும் வேதாந்தத்திலே சொல்லப்பட்ட வித்யைகளுக்குப் பொருளாய் இருக்கக் கூடியவனும் நரசிம்ஹன்தான்.

அப்படிப்பட்டவனை வெறும் உக்ர ரூபியாக இல்லாமல், லக்ஷ்மியோடு கூடிய லக்ஷ்மி நரசிம்ஹனாக நாம் உபாசிக்க வேண்டும்.

ஈச்வரனே ஆச்சர்யமாய், நரசிம்ஹனை உபாஸிக்கும்படியான மந்திரத்தைச் சொல்கிறார். அதை யார் தினமும் சொல்கிறார்களோ அவர்களுக்கு ஆரோக்கியம், வித்யை, செல்வம் எல்லாம் சம்பவிக்கும்.

முக்கண்ணனே முக்கண்ணனின் பெருமையைச் சொல்லும் இந்த ஸ்தோத்திரம் அஹிர் புத்ரிய சம்ஹிதை என்பதில் உள்ளது.

எனவே, எல்லா அவதாரங்களிலும் உயர்ந்தது நரசிம்ஹ அவதாரம் எனக் கொள்ளலாம். இதை உபசாரமாகவோ, அதிகயோக்தியாகவோ சொல்லவில்லை... காரணமிருக்கிறது!

நரசிம்ஹன் அவதாரம் எதனால் ஏற்பட்டது என்று கேட்டால், ஹிரண்ய கசிபுவை சம்ஹரிப்பதற்காக ஏற்பட்டது என்று சாதாரணமாய் பதில் கிடைக்கும்.

ஆனால் ஹிரண்ய சம்ஹாரத்துக்காக ஏற்பட்டது அல்ல இந்த அவதாரம்.

சரி, பிரஹ்லாதனை ரக்ஷிப்பதற்காக ஏற்பட்டதா இந்த அவதாரம்...? என்றால், அதுவும் இல்லை!

அக்னியில் தூக்கிப் போடும்போதும் மலையிலிருந்து உருட்டும் போதும், சமுத்திரத்தில் எறிந்த போதும், யானையைக் கொண்டு இடறச் செய்த போதும், விஷப் பாம்புகளிடையே விடப்பட்ட போதும் பிரஹ்லாதனை யார் ரக்ஷித்தார்கள்?

அப்போதெல்லாம் அவதரிக்காத நரசிம்ஹன், பிரஹ்லாதனின் வார்த்தையைக் காப்பாற்றத்தான் அவதரிக்கிறான்!

'எங்குமுளன் கண்ணன்...' 'அவன் இல்லாத இடம் கிடையாது' என்று பிரகலாதன் சொன்னபோது அதை உண்மையாக்க பரமாத்மா அவசரத் திருக்கோலம் பூண்டு சர்வ பதார்த்தங்களிலேயும் நிறைந்தான்!

இப்படி அவனை அவதரிக்கச் செய்த பிரஹலாதனே அவன் பெருமையைப் பேசுகிறான்.

---

## ஜாலி போட்டி - 5 முடிவு

அ.தி.மு.க. செயற்குழுக் கூட்டத்தில் ஜெயலலிதா உதிர்த்த முத்துக்களை வாசகர்கள் பத்திரமாக எடுத்துப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள் என்பதற்குப் போட்டிக்கு வந்த ஏராள சரியான விடைகளே சாட்சி.

குலுக்கலில் தேர்வாகி ரூ. 5000/- பரிசு பெறுபவர் :

**ஏ. ஆறுமுகம்,**
**நூலகர், கொடிமங்கலம், மதுரை - 10.**
**வாழ்த்துக்கள்!**

**சரியான விடைகள் :**

1. சகோதரியாக
2. தாயாக
3. வரவேற்பார்
4. பொதுக்குழு
5. எம் ஜி ஆர் ஆட்சி
6. ஒரு குடும்பத்துக்கு
7. அக்னிப் பிரவேசத்தில்
8. உலகத் தமிழ்ச்சங்கம்

அவசர அவசரமாகப் போட்டுக் கொண்ட வேஷமாம்! யோசித்து எடுத்த ராமாவதாரம் போலன்றி, தேவதைகளின் பிரார்த்தனைகளுக் கிறங்கித் தோன்றிய கிருஷ்ணாவதாரம் போலன்றி, நினைத்த மாத்திரத்தில் எடுத்த அவ தாரம் நரசிம்ஹ அவதாரம்!

அவசரத் திருக்கோலம் என்றாலும் அது தான் மிகவும் அழகான அவதாரமாக அமைந் திருக்கிறது!

மிக ஏற்பாடாக விருந்து சமைக்கும் போதெல்லாம் பிரமாதமாக அமைவதில்லை. ஆனால் ஊரிலிருந்து வரும் திடீர் விருந் தினருக்கு அவசரமாய்த் தயாரிக்கப்படும் எளிய உணவு அற்புதமாக அமைகிறது!

நரசிம்ஹ அவதாரம் இந்த அவசர உப சரணை மாதிரி... அதன் அழகைச் சொல்லி முடியாது!

பிரஹலாதனின் வாக்கை மட்டுமின்றி பிரும்மாவின் வாக்கைக் காப்பதற்காகவும் எடுக்கப்பட்டது நரசிம்ஹாவதாரம்.

ஹிரண்யகசிபுவுக்கு எசகுபிசகான நிபந்தனைகளடங்கிய வரத்தைக் கொடுத்தவர் அவர்தானே... 'இரவிலும் பகலிலும், மனித ராலும் மிருகத்தாலும் எனக்கு அழிவு வரக் கூடாது' என்றெல்லாம் கேட்டான் அல்லவா.

பிரும்மா கொடுத்த அத்தனை வாக்கையும் காப்பாற்றிக் கொடுத்து அதே சமயத்தில் ஹிரண்யகசிபுவை சம்ஹாரமும் பண்ண பரி வுடன் எடுத்த அவதாரம் நரசிம்ஹ அவதாரம்.

'பிரும்மா வாக்குக் கொடுத்துவிட்டால் என்ன?' என்று அதை மீறும் வல்லமையும் உரி மையும் பகவானுக்கு இல்லையா என்ன...? ஆனால் அவன் பிரும்மாவின் வாக்கைக் காப் பாற்றிக் கொடுக்க பிரயத்தனத்துடன் அவதரித் தான். ஏன்....

அந்த வாக்கு மீறப்பட்டால், பிரும்மாவின் வரம் செல்லாது என்று ஆகிவிடும்! அப்புறம் யாராவது பிரும்மாவை ஸ்தோத்திரம் பண்ணு வார்களா? ஏற்கெனவே அவருக்கு ஸ்தோத்திர மும் கோயிலும் குறைவு... அவர் தொடர்பான மந்திரங்களை தொனி குறைத்துத்தான் சொல்ல வேண்டும் என்று வாக்கு தேவதையின் சாபம் வேறு இருக்கிறது....

ஒரு ஊரில் உபன்யாசகர் ராமாயண உபந் யாசம் 48 நாள் முடித்து, வீட்டுக்குக் கிளம்பு கிறார். உபன்யாசத்தை ஏற்பாடு செய்தவருக்குச் சந்தேகம்.

"சுவாமி! இந்த நாற்பத்தெட்டு நாட்களும் 'ராமன் ராமன்' என்றும் 'ராவணன் ராவணன்' என்றும் 'ராக்ஷஸன், ராக்ஷஸன்' என்றும் சொல்லிக் கொண்டேயிருந்தீர். இதிலே ராக்ஷ ஸன் யார்? ராமனா? ராவணனா?" என்று கேட்டாராம்!

## எறும்பார் கடிக்கிறார்!

**நடிகர் சங்கத்தின் ஒரு கோடி ரூபாய்க் கடனைத் தமிழக அரசு செலுத்தும்!**

**– முதல்வர் மு. கருணாநிதி**




உபந்யாசகர் தமது மூட்டைகளைக் கட்டு வதை நிறுத்திவிட்டார்!

சந்தேகப் பேர்வழி தொடர்ந்து கேட்டார்.

"இப்ப கேட்ட சந்தேகம் இந்த நாற்பத் தெட்டு நாட்களா உண்டானதுதான். அதற்கும் மேல, ரொம்ப நாளா ஒரு சந்தேகம். பிரும்மா வுக்கு ஏன் நம் தேசத்தில் கோயில்களே இல்லை...?"

உபந்யாசகர் சொன்னாராம்:

"உம்மையும் படைச்சு, எம்மையும் படைச்சு, உம்மெதிரே எம்மை நாற்பத்தெட்டு நாள் உபந்யாசம் பண்ண வைத்தாரே அந்த பிரும்மா! அதனால்தான் அவருக்குக் கோயிலே இல்லை போலும்...."

ஆக, பிரும்மாவுக்கு ஏற்கெனவே ஸ்தோத் திரமும் கோயில்களும் குறைவு. இந்த நிலை யிலே பகவான் அவரை மதிக்கலைன்னா.... வேறு யார் மதிப்பார்கள்? அதனால்தான் பிரும் மாவின் வாக்கைக் காப்பாற்ற நரசிம்ஹ அவ தாரம் எடுத்தான்.

நாராயணனின் நாபியிலிருந்து உருவா னவன் நான்முகன். அவன் நாபிக் கமலத்தில் தான் அமர்ந்திருப்பதை உணர்வதற்கே அவ னுக்கு ரொம்ப நாட்களாயிற்றாம்! ஆயிரம் கோடி யுகங்கள் தவம் பண்ணி, நாராயணனே தமக்கு மூலம் என்று உணர்ந்தான் பிரும்மா! அந்த தேவதைக்கு ஒரு அகௌரவம் வரக் கூடாது என்கிற பரிவினால் அவன் கொடுத்த வரத்துக்கு எந்த வித பங்கமுமில்லாமல், அகடிதகடனா சாமர்த்தியத்தோடு அவதரித் தான் பகவான். அவனுக்கு எத்தனை காருண் யம் பாருங்கள்!

(தொடரும்)



இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் பூரணியைப் பார்த்ததுமே அடையாளம் தெரிந்துவிட்டது. நீலப் பட்டுச் சேலையும் மூக்குக் கண்ணாடியுமாய் யாருடனோ பேசிக் கொண்டிருந்தாள்.

முப்பது ஆண்டுகளில் இளமை மூப்புறுவது இயற்கை. பூரணிக்கும் கொஞ்சம் சுருக்கம், கொஞ்சம் நரை எல்லாம் இருந்தது. மூக்குக் கண்ணாடி வேறு. மெலிந்திருந்தாள். வயதானால் மனிதர்கள் ஒன்று, சதை போட்டு விடுகிறார்கள்; அல்லது சதையைத் தொலைத்து விடுகிறார்கள். உடலில் மாற்றம் இல்லாமலே பயணத்தை முடிக்கிறவர்கள் அரிது என்று தோன்றியது. இந்த மாறுதல்களை மீறி, ஐம்பத்திரண்டு வயதிலும் 'நான் பூரணிதான்' என்று அந்த முகம் சொல்லியது. மின்னும் நிறமும் நட்பான புன்னகையும் மனசின் ஆழங்களுள் புகுந்து துளைக்கின்ற (இப்போது கண்ணாடிக்குப் பின்னிருக்கும்) கண்களும் நான் பூரணி, நான் பூரணி என்று அவர் நெஞ்சுக்குப் பறைசாற்றின.

கல்யாண வீட்டின் ஒலிகள், வாசனைகள், பட்டுப் பளபளப்புகள். அனைத்துக்கும் பின்புலமாய் நாதசுரத்தின் மங்கள இசை. இது எதிலும் மனம் பதியாமல், நண்பன் வீட்டுத் திருமணத்துக்கு மனைவி, மகன், மருமகளோடு வந்திருந்து முகூர்த்தம் முடிந்து விடைபெறத் தயாராயிருந்த நாராயணன், அருகில் மனைவி இருக்க, விருந்தினர் கூட்டத்தில் தற்செயலாய்த் தெரிந்த மாஜி காதலியைப் பார்த்துக் கொண்டிருந்தார். கல்யாண வீட்டிலிருந்து மனம் ஓடிவிட்டது. இளம் நாணா இளம் பூரணியுடன் சென்னை நகரின் ஓட்டல்களிலும் திரைப்பட அரங்குகளிலும் மெரீனா கடற்கரையிலும் பொழுதைக் கழிக்கப் போய் விட்டான். ஒவ்வொரு கணமும் ஓர் இனிய கனவாய்த் திகழ்ந்த நாட்கள் அவை.

"இப்படிப் பொது இடத்தில் என் கையைப் பிடிச்சுக்காதீங்க நாணா! எல்லாரும் பார்க்கறாங்க."

"நாளைக்கு ஊரறிய உன் கையை நான்

# பரிசு

ஆர். சூடாமணி

பிடிக்கிறபோதும் இப்படித்தான் சொல்லுவியா?"

கடற்கரையில் ஒரு பெண்ணும் ஆணும் கைகோத்துக் கொள்வதே அதிசயமாய் இருந்த காலம் அது. பூரணி வெட்கப்படுவாள். ஆனால் முகத்தின் பூரிப்பு அவள் பேச்சையும் கைவிலக்கலையும் பொய்யாக்கி விடும்.

"நீ இப்போ எத்தனை அழகாயிருக்கே தெரியுமா பூரணி?"

"தெரியுமே!"

"எப்படி? இங்க கண்ணாடி எதுவும் இல்லையே?"

"உங்க கண்கள் இருக்கே!"

இப்படியெல்லாம் தன்னால் பேச முடிவது அவளுக்கே வியப்பாக இருக்கும். இதயமே சொற்களை உருவாக்கிவிடும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

"நம்ம கல்யாணம் நடக்குமா நாணா?"

அந்தஸ்து குறுக்கிடும் என்று அவள் பயந்தாள். அவன் பிரபல வழக்கறிஞர் சேஷாசாரியின் ஒரே வாரிசு. தானும் ஒரு கட்டடக் கம்பெனியில் உதவி என்ஜினியர். அந்தக் கம்பெனி உருவாக்கும் கட்டடங்கள் போல் உயரப் போகிறது அவன் வருங்காலம். அவள் அந்தப் பிரபல வழக்கறிஞரின் குமாஸ்தா முத்தையாவின் மகள். பி.எட். செய்து கொண்டிருந்தாள். அவள் சம்பாதிக்க வேண்டியது குடும்பத்துக்கு அவசியம். கீழே ஒரு தங்கையும் தம்பியும் இருந்தார்கள்.

"கட்டாயம் நடக்கும்."

"எனக்கென்னமோ பயமாயிருக்கு."

"எந்தத் தெய்வத்தின் மேல் சத்தியம் பண்ணி நான் சொல்லணும் சொல்லு."

அவனுடைய அந்தப் பதிலே அவளுக்கு ஆயிரம் சத்தியங்களுக்கு சமமாய் இருந்தது.

கடைசியில் குறுக்கே நின்றது அந்தஸ்து இல்லை. ஜாதி. வேற்று ஜாதியில் அவன் மணம் செய்து கொள்வதற்கு அவன் தகப்பனார் திட்டவட்டமாய் மறுத்துவிட்டார்.

"நீங்க எதிர்த்து நிக்கலையா நாணா?" அவள் பதறினாள்.

"நின்னேன். என்ன பிரயோஜனம்? ஒரு அளவுக்கு மேல நான் அவரை எப்படி எதிர்க்க முடியும் சொல்லு? நான் அவருக்கு ஒரே பிள்ளை. என்னை வளர்த்து ஆளாக்கினவர் அவர்..."

"ரொம்ப அதிசயந்தான், பெத்த பிள்ளையை வளர்த்து ஆளாக்கறது."

"உனக்கு வாய் வெடுக்கு ஆனாலும் ஜாஸ்தி பூரணி."

"அது இப்பத்தான் தெரியுதாக்கும்?"

"நாம் சண்டையில பிரிய வேணாம்."

"அப்படின்னா பிரிவுதானா?"

"வேறென்ன? அப்பாகிட்ட எத்தனையோ சொல்லிப் பார்த்தேன், கெஞ்சினேன். அம்மா ஒத்துண்டப்புறம் கூட அப்பா துளிக்கூட விட்டுக் கொடுக்கலே. எனக்கு வேற வழி இல்லை பூரணி. மன்னிச்சுக்கோ."

"எவ்வளவு சுலபமா சொல்லிட்டீங்க! கடைசில 'நமக்குள் நிக்கறது 'மன்னிச்சுக்கோ'ன்னு இந்த ஒரு வார்த்தைதானா?"

அவன் மணலிலிருந்து எழுந்து பான்ட்டைத் தட்டிக் கொண்டான்.

"நாணா! நாணா, ப்ளீஸ், நம்ம ஆசைகள் இப்படி முடிய வேணாம்..." தவிப்புடன் அவன் கையைப் பற்றினாள்.

"கைய விடு பூரணி. எல்லாரும் பார்க்கறா."

நாராயணன் நண்பனை அணுகினார்.

"அப்போ நாங்க கிளம்பறோம் சண்முகம்."

"சரி. தாம்பூலப்பை வாங்கிக் கிட்டயா?"

"ஆச்சு. பை த வே..."

"என்ன?"

"அதோ அங்கே ஜன்னல் பக்கமாய் நின்னுண்டு ரெண்டு பசங்க கூட பேசிண்டிருக்காங்களே ஒரு அம்மா, நீலப் புடைவை கட்டிண்டு... உங்க யாருக்கானும் உறவா? நான் எப்பவானும் இங்கே வந்திருந்த சமயத்தில் அந்தம்மாவைப்

பார்த்திருக்கேனா? தெரிஞ்ச முகமாட்டம் இருக்கேன்னு கேக்கறேன்."

"உறவெல்லாம் இல்லை. இன்னிக்குத்தான் எனக்கே என் மனைவி தன் மாதர் மன்ற ஃப்ரெண்டுகள்ல ஒருத்தின்னு சொல்லி அறிமுகப் படுத்தினாள். ஸ்கூல் இன்ஸ்பெக்ட்ரஸாம். அன்னபூரணி முத்தையான்னு பேரு."

சுரீரென்று அடிவயிற்றில் கத்தி பாய்ந்தது. அன்னபூரணி முத்தையா! முத்தையா என்பது அவள் தகப்பனாரின் பெயர் என்று நினைவிருந்தது. அப்படியானால்... அவள் திருமணமே செய்து கொள்ளவில்லையா? தன்னாலா? தான் மறுத்ததாலா?

ஐந்து நிமிட நேரத்துக்கு ஒரு பெரும் அதிர்வு அவர் உள் உலகத்தைப் புரட்டி எடுத்தது. கடந்த முப்பது ஆண்டுகளை வாழ்வின் மகத்தான தவறு என்று முத்திரை குத்தியது.

"என்ன, என்னமோ மாதிரி இருக்கேள்? தலை சுத்தறதா என்ன? முகமெல்லாம் வேர்த்திருக்கே?"

ரசித்திருக்க வேண்டும். அவள் முகத்தில் ஒரு கனிந்த புன்னகை தேங்கியிருந்தது. பள்ளியாசிரியையாய் இருந்தவள். இளம் உயிர்களை நேசித்தவள்.

இப்போது பூரணி கூட்டத்திலிருந்து சிறிது விலகித் தனியாய்த் தெரிந்தாள். பரிச்சயமானவர்கள் யாரும் அருகில் இல்லை போல் தோன்றியது.

நாராயணன் மெள்ள அவள் பக்கமாய் நகர்ந்தார். முதலில் அவள் கவனிக்கவில்லை. பிறகு எதேச்சையாய்த் திரும்பியவளின் முன்னே அவர் முகம் நின்றது.

முப்பது ஆண்டுகளுக்குப் பின் அந்தத் துளைக்கும் விழிகளை நேருக்கு நேர் எதிர்கொண்டபோது நாராயணனுக்குப் பாதாதிகேசம் ஒருகணம் நடுக்கம் ஓடியது. காலம் இருவர் மீதிருந்தும் கழன்று விழுந்து விட்டது போல் உணர்ந்தார். இளம் நாணா,

## அருள் வாக்கு



நம் மதத்தில் மட்டும் ஏன் யக்ஞம் இருக்கிறது? என்று ஆலோசிக்கிறபோது, இவ்வுலகில் மனிதர்களாகிய நம்முடைய ஜீவனரீதியைக் கவனிப்போம். ஓர் ஊரில் ஒரு ஸாமான் அதிகமாக விளைந்தால், அதை அந்த ஸாமான் விளையாத ஊருக்கு அனுப்பி, நம் ஊரில் விளையாததும் அந்த ஊரில் விளைவதுமான மற்றொரு ஸாமானை வாங்கிக் கொள்கிறோம். தச்சன், கொல்லன் முதலியவர்கள் நமக்காகச் சில காரியங்களைச் செய்கிறார்கள்; நாம் அவர்களுடைய காலக்ஷேபத்திற்கு வேண்டியவைகளைக் கொடுக்கிறோம். பசுக்களுக்குப் புல் போடுகிறோம்; அவை நமக்குப் பால் கொடுக்கின்றன. நாம் ராஜாங்கத்திற்கு வரி கொடுக்கிறோம். அவர்கள் நமக்குத் தீங்கு வராமல் காவல் கட்டுச் செய்கிறார்கள். இப்படி உலகம் முழுவதுமே பரிவர்த்தனை க்ரமத்தில் (Exchange) நடந்து வருகிறது. இப்படியே நாம்

மனைவியின் கவலையான குரல் காதருகில் ஒலித்தபோதுதான் சிறிது நேரம் தானே தன்னிலிருந்து வேறாகிப் போயிருந்ததை அவர் உணர்ந்தார்.

"ஒண்ணுமில்லே அமிர்தா. இன்னிக்குக் கல்யாணத்துக்கு வரணுமேன்னு சீக்கிரம் எழுந்துட்டேனில்லையா? அதான் ஒரு நிமிஷம் நின்னுண்டே தூங்கிட்டேன் போலிருக்கு."

"தலைசுத்தல் இல்லையே?" என்றாள் அமிர்தவல்லி மறுபடியும். "உங்க பி.பி. தொந்தரவை நினைச்சுத்தான் எனக்குக் கவலை. வேறென்ன!"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே."

எனக்காக ஒரு பெண் ஆயுளெல்லாம் தனி வாழ்வு வாழ்ந்திருக்கிறாள்!

முதலில் அதிர்ச்சியாய் உறைந்திருந்த அந்த எண்ணம் இப்போது லேசாய் ஒரு பெருமிதமளித்தது. பூரணியின் திசையில் ஜாடையாய்ப் பார்த்தார். அவளுடன் பேசிக் கொண்டிருந்த சிறுவர்கள் "டாட்டா ஆன்ட்டி!" என்று விடைபெற்று வேறு பக்கம் செல்வது தெரிந்தது. பூரணி அவர்களுடன் பேசியதை மிகவும்

இளம் பூரணி. பார்த்துப் பார்த்து நேசித்து நெக்குருகச் செய்திருந்த அவள் வடிவம். தன் அழகை அவன் கண்களில் கண்டிருந்த அந்த முகம்.

அவளுக்கு அடையாளம் தெரிகிறதா? ஒரு பதற்றத்துடன் நாராயணன் தமது இப்போதைய உருவத்தை நினைவுபடுத்திக் கொண்டார். நெற்றிக்கு மேல் இன்னொரு நெற்றியை அமைத்துவிட்ட வழுக்கை. தோள் நெகிழ்ந்து இடுப்பு பருத்து விட்ட கோலம். ரத்த அழுத்தத்தால் எந்த நிமிஷம் நாலு பேர் முன் தலைசுற்றல் வந்து விடுமோ என்ற இடைவிடாத ஜாக்கிரதை உணர்வால் இறுகியிருக்கும் முகம். மூக்கின் மேல் வழிந்து விரலால் தூக்கித் தூக்கி விட்டுக் கொள்ளும் கண்ணாடி.

முப்பது ஆண்டுகளுக்கு முன் பரவசமாய் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தபடி இருந்த இரு ஜோடிக் கண்களும் இப்போதும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தன, இரு வெள்ளெழுத்துக் கண்ணாடிகளுக்குப் பின்னிருந்து.

''என்னை... ஞாபகம் இருக்கா?''

''மறக்க முடியுமா?''

அவன் குரல் மிக மெல்லியதாய் வந்தது. ஆனால் அதன் இனிமையும் இளமையும் மாற வில்லை.

என்ன எண்ணங்கள் ஓடுகின்றன அவன் மனத்தில்! உதடுகள் லேசாய் நடுங்குவது தெரிந் தது. இந்தச் சந்திப்பு அவளுக்கும் ஓர் உலுக்கல் தானே?

''எப்படி இருக்கே பூரணி?'' அந்தப் பெயர் நாவில் ஓர் அதிர்ச்சியாய், பிறகு ஒரு வியப் பாய், கடைசியில் ஓர் இன்பமாய், படிந்தது.

''நல்லாயிருக்கேன். நீங்க?''

''நானும்.''

அவள் உமிழ்நீரோடு தன் உணர்ச்சிகளைச் சேர்த்து விழுங்குவது தெரிந்தது. முதல் விநா டிக்குப் பிறகு குரல் இயல்பாகி விட்டது. நெற்றியில் குங்கும வட்டத்தின் ஓரம் வேர்வை ஈரத்தில் லேசாய்க் கறுத்துக் காட்டியது.

வெள்ளையும் கறுப்பும் இழைந்த கூந்தலில் மல்லிகைப் பூ சூட்டியிருந்தாள். கழுத்தைப் பார்த்தார். உள்ளங்கழுத்தோடு அணிந்திருந்த மெல்லிய தங்க செயின் அந்தப் பொன் வண் ணச் சருமத்துடன் கலந்து போய் இருக்குமிடம் தெரியாமல் கிடந்தது.

தாலி இல்லை.

மீண்டும் உள்ளே ஒரு பெருமிதம்.

''நீங்க இங்கே..''

''கல்யாணப் பெண்ணின் அப்பாவுக்கு ஃப்ரெண்ட்'' சற்று நிறுத்தினார். ''உனக்கு என் மேல கோபம் இல்லையே?'' என்றார், இருக் காது என்ற நிச்சயத்துடன்.

''கோபமா?'' ஒருகணம் அவரை மௌன மாய் ஏறிட்டு நோக்கினாள். ''நீங்க என்னை நிராகரிச்சதுக்கா?''

''மெதுவா, மெதுவா!'' சுற்றுமுற்றும் அவசர மாய்ப் பார்த்தார். ''யார் காதுலயாவது விழப் போறது!''

''இன்னும் அதே பழைய நாணா!'' அவள் சிரித்தாலும் குரலைத் தாழ்த்தியிருந்தாள்.

''சொல்லு பூரணி. என்மேல கோபம் இல்லையே?''

''இத்தனை வருஷத்துக்கப்புறம் இந்தக் கேள்விக்கு என்ன அர்த்தம்? கோபம் இருக் குன்னு சொன்னால் என்ன செய்யப் போறீங்க?''

அவர் திகைத்து விட்டார்.

''நான் எந்த மாதிரி வெள்ளத்தில் மூழ்கி மூச்சுத் திணறி செத்துச் செத்துப் பிழைச்சுக் கடைசில ஒருவாறு கரை சேர்ந்தேன்னு உங் களுக்குத் தெரியுமா? அதைப் பத்தி எப்பவா னும் யோசிச்சதாவது உண்டா? 'மன்னிச் சுக்கோ'ன்னு ஒரு வார்த்தை சொல்லிட்டு அன்னிக்குப் போய்ட்டீங்க. 'கோப மில்லை'ன்னு ஒரு வார்த்தை நான் இன்னிக் குச் சொல்லிட்டா உங்க மனசாட்சி நிம்மதியா யிடும். அப்படித்தானே நாணா?''

குரலின் இனிமை மட்டுமென்ன, நாக்கின் கூர்மையும் மூப்புறவில்லை.

''அப்படியெல்லாம் இல்லை பூரணி... அன்னிக்கு நான் இருந்த நிலையை நீ யோசிச் சுப் பார்க்கணும்...''

''உங்க மனைவி நல்லாயிருக்காங்களா? சுய ஜாதிப் பெண்ணைக் கட்டியிருப்பீங்களே! எத் தனை குழந்தைங்க?'' அவள் இரக்கம் காட்டத் தயாராயில்லை.

ஏன் இப்படி வேர்த்துக் கொட்டுகிறது? கூட்ட நெரிசலா? படபடப்பாய் வருகிறதே... ஹார்ட் அட்டாக் ஏதானும் ஆரம்பிக்கிறதா என்ன? அமிர்தாவைக் கூப்பிடலாமா...? குனிந்து, சட்டை நுனியால் முகத்தையும் கழுத்தையும் துடைத்துக் கொண்டார்.

அவள் குரல் சட்டென்று இளகியது.

''என்ன நாணா? உடம்பு சரியில்லையா?''

அவர் நெகிழ்ந்து போனார். என்ன கோபித் தாலும் இப்போதும் அவரிடம் அவளுக்கு எத்தனை அக்கறை! அவர் நினைவிலேயே வாழ்ந்து திருமணத்தைக் கூட ஒதுக்கி விட் டவள். இந்த அன்புக்கு ஏதேனும் ஒரு வகையில் பரிசளிக்க வேண்டாமா?

''உடம்புக்கு ஒண்ணுமில்லை பூரணி... உன் கோவம் எனக்குப் புரியறது. ஆனா நீ

---

லோகாந்தரங்களுடன் சில பரிவர்த்தனை செய்து கொண்டிருக்கிறோம். இஞ்ஜினீயர் முதலியவர்கள், பெய்த மழை நீரை ஒழுங்காகப் பிரித்து ஆறு முதலியவைகளில் பாயும்படி விடுவார்களேயொழிய, மழை பெய்யும்படி செய்ய அவர்களால் முடியாது. மழை பெய்யவேண்டுமானால், நாம் சில ஸாமான் களைத் தேவலோகத்திற்கு அனுப்ப வேண்டும். இந்த பரஸ்பர பரிவர்த்தனையே கீதையில் சொல்லியிருக் கிறது.

தேவான் பாவயதாநேன தே தேவா பாவயந்து வ:

பரஸ்பரம் பாவயந்த ச்ரேய: பரம் அவாப்ஸ்யத

இதன் அர்த்தம்: ''யாகத்தைக் கொண்டு நீங்கள் தேவர்களைத் திருப்தி செய்து வையுங்கள். அந்த தேவர்கள் மழை முதலியவற்றால் உங்களுக்கு க்ஷேமத்தைச் செய்யட்டும்; இப்படியே நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு, மேலான க்ஷேமத்தை அடையுங்கள்.''

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



''அந்த ஜோடியின் காதல் ஆழமானதுன்னு எப்படிச் சொல்றே?''

''சுண்டல் யார் வாங்குறதுன்னு ஒரு மணி நேரமா ஒருத்தரை ஒருத்தர் ஆழம் பார்த்துக் கிட்டிருக்காங்களேடா!''

– ஆலத்தம்பாடிராஜகோபால்.

---

நினைக்கிற மாதிரி நான் முழுக்க முழுக்கக் கேவலமானவன் இல்லை. நான் பிள்ளையாய் இருக்கும்போது என் அப்பாவை எதிர்க்க முடியலே. ஆனா நான் அப்பாவானபோது என் பிள்ளையின் ஆசையை நிறைவேத்த முடிஞ்சது.''

''எப்படி?'' என்றாள் பூரணி ஆவலுடன்.

''அதோ அங்கே மண்டப வாசல் தோரணத்துக்குக் கீழே ரெண்டு பேர் நிக்கறாளே, அவா என் பிள்ளையும் மாட்டுப் பெண்ணும்'' என்று நாராயணன் உண்மையைச் சொன்னார். கும்பகோணம் திருவேங்கடாசாரியின் சீமந்த புத்திரியாகிய கோமளா என்ற தம் மருமகளைச் சுட்டிக்காட்டி ''அந்தப் பெண் உன் ஜாதி. என் பிள்ளை ஆசைப்பட்டான்னு அவளையே அவனுக்குக் கல்யாணம் பண்ணி வச்சேன்'' என்று பொய் சொன்னார்.

அவள் முகம் நொடியில் மலர்ந்தது.

''அப்படியா நாணா? ரொம்ப சந்தோஷம். நான் கோபப்பட்டதை மறந்துடுங்க. எவ்வளவு நல்ல காரியம் செய்திருக்கீங்க! எத்தனையோ பேர் தப்பு செய்யறாங்கதான்! ஆனா அதை உணர்ந்து, சந்தர்ப்பம் வரப்ப அதுக்குப் பரிகாரம் செய்யற பெரிய குணம் எல்லாருக்குமே வராது. யு ஆர் க்ரேட். எனக்கு ரொம்ப மகிழ்ச்சியாயிருக்கு.''

அவளுக்கு அந்த மகிழ்ச்சியைப் பரிசாகத் தந்ததில் அவர் மனம் நிறைந்தது.

''இந்த ஒரு பையன்தானா உங்களுக்கு?''

''ஆமாம்.''

''உங்க மனைவி இங்க வந்திருக்காங்களா?''

''அதோ... அவள்தான்.'' அமிர்தவல்லியைச் சுட்டிக்காட்டினார்.

''ரொம்ப அழகாயிருக்காங்க. சந்தோஷம் நாணா. நீங்க இப்ப என்ன பண்றீங்க? என்னவாய் இருக்கீங்க?''

''கம்பெனி டைரக்டர். அம்பத்தெட்டு வயசு ஆகறதில்லையா? அடுத்த மாசம் ரிடையர் ஆறேன்.''

''காலம் ரொம்ப வேகமாய்த்தான் ஓடிப் போயிடிச்சு.''

சில கணங்கள் மௌனமாய் இருந்தார்கள்.

''நான் உங்களைப் பத்தி விசாரிச்சேனே! நீங்க என்னைப் பத்தி எதுவும் விசாரிக்க மாட்டீங்களா நாணா?'' அவள் சிரித்தாள். ''நான் வந்து...''

''இன்ஸ்பெக்ட்ரஸ் அஃப் ஸ்கூல்ஸ். இன்னும் அன்னபூரணி முத்தையாவாத்தான் இருக்கே. எனக்கு எல்லாம் தெரியும்.''

அவள் வியப்புடன் அவரைப் பார்த்தாள்.

''எனக்காக ஆயுசெல்லாம் கன்னியாவே இருந்திருக்கியே! இதுக்கு நான் எப்படி நன்றி சொல்றது பூரணி?''

அவள் சிறிது நேரம் அவரையே உன்னிப் பாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு புன்னகை செய்தாள்.

''எனக்கு நேரமாகுது நாணா. காலையில் சீக்கிரமே வந்துட்டேன். நான் கிளம்பணும்.''

''நானும் கிளம்பிண்டுதான் இருந்தேன் உன்னைப் பார்த்தபோது. வரட்டுமா பூரணி?''

''நானும் போய் வரேன்.''

ஒருவரையொருவர் இவ்வளவு காலத்துக்குப் பிறகு சந்தித்தது பற்றி மகிழ்ச்சி தெரிவித்துக் கொண்டார்கள். ஒருவரையொருவர் முகவரி கேட்கவில்லை.

நாராயணன் தம் குடும்பத்தினருடன் காரில் ஏறிச் சென்றார். பூரணி தன் சிநேகிதியிடம் விடைபெற்று, ஓர் ஆட்டோ பிடித்து வீட்டுக்குப் பயணமானாள்.

இவன் சமூகப் பழக்கத்துக்கும் தகப்பனாரின் அதிகாரத்துக்கும் அடிபணிந்து தன்னையும் தன் காதலையும் நிர்தாட்சண்யமாய்ப் புறக்கணித்துச் சென்ற பின்னும் தான் இவனையே நினைத்துக் கொண்டு ஆயுளெல்லாம் கன்னியாக வாழ்ந்து வருவதாக எண்ணி விட்டான்? என்ன ஒரு ஈகோ! எத்தகைய உயர்வு மனப்பான்மை!

ஆனால், 'நான் காதல் தோல்வியிலிருந்து ஒருவாறு மீண்டு முப்பதாம் வயதில் ஒரு சக ஆசிரியரைப் பதிவுத் திருமணம் செய்து கொண்டேன். பத்தொன்பது வயதில் எங்களுக்கு ஒரு மகள் பி.ஏ. இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருக்கிறாள்' என்று அவனிடம் சொல்ல வந்தவளுக்கு, அவளைப் பற்றிய அவனுடைய பிரமையை அறிந்ததும் சொல்ல மனம் வரவில்லை. என்ன இருந்தாலும் அவன் மனவிரிவு வரப் பெற்றவனாய்த் தன் மகனுக்கு கலப்புத் திருமணம் செய்திருக்கிறான். அப்படியிருக்க, அவள் அவனுக்காகக் கன்னி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறாள் என்ற நினைப்பில் அவனுக்கு ஒரு திருப்தி இருக்கிறதென்றால் அதை ஏன் அவனுக்கு மறுக்க வேண்டும்? அவன் மனமாற்றத்தோடு செய்த செயலுக்கு அந்தத் திருப்தி ஒரு பரிசாக இருக்கட்டுமே!

நல்லவேளையாக, ஒரு பெண்ணின் தகப்பனாருக்கும் கணவனுக்கும் ஒரே பெயர் அமையக்கூடும் என்று அவனுக்குத் தோன்றியிருக்கவில்லை.

# தண்ணீர் வேட்டை

"கிளம்பலாமா?" என்றாள் கல்யாணி.

ரொம்ப நாட்களுக்குப் பின் மதுரைக்கு - மகன் வீட்டுக்குப் போகப் போகிற சந்தோஷம், பரபரப்பு அவள் முகத்தில் தெரிந்தது.

"நா வயக்காடு வரை போய் ஒரு பார்வை பார்த்துட்டு வந்துடறேன். நீ ரெடியா இரு- கிளம்பிடலாம்." என்றார் ராமதீர்த்தன்.

பிள்ளையைப் பார்த்துத்தான் எவ்வளவு நாளாகி விட்டது!

பரபரப்பாக செயல்பட ஆரம்பிக்கிறாள், கல்யாணி.

பேத்திக்குத் தேன்குழல் பிடிக்கும், மாப்பிள்ளைக்கு கைமுறுக்கு, மாட்டுப் பெண்ணுக்கு திரட்டிப்பால்... எல்லாமே தயாராக இருக்கிறது.

அப்படியே அம்பாசமுத்திரத்து தேன் வாழை, தோரண மலை பலாப்பழம், விக்கிரம சிங்கபுரத்து வெற்றிலை என்று தன் மண்ணின் சீதனங்களையும் மூட்டை கட்டிக் கொள்கிறாள்.

தாமிரபரணி ததும்பிப் பாயும் பூமி! இப்பொழுது தவழ்ந்து ஓடக் கூடத் தண்ணீர் இல்லை.

இருந்தாலும் கிணற்றுப் பாசனம் கைவிடவில்லை.

அதோ, நெல்லும் வாழையும்தான் என்னமாய் பொசிந்து வளர்ந்திருக்கிறது!

ராமதீர்த்தன், யூரியா. பொட்டாஷ், தழைச் சத்து என்று விவசாய சமாசாரங்களில் பழம் தின்று கொட்டை போட்டவர். அதனால்தான் அவரது வயலில் இத்தனை பசுமை.

கூடவே ஒரு பிரதான விஷயம் - அந்த வற்றாத ஊற்றுக் கிணறு.

பக்கத்து வயல், ஒச்சாத் தேவனுடையது! வாடி வதங்கி சவலையாகக் கிடக்கிறது. அதைப் பார்க்கும்போது ராமதீர்த்தனுக்குள் ஓர் இனம்புரியாத இன்பம்.

எதிர்ப்படுகிறார்



இந்திரா சௌந்தர்ராஜன்



"ஹோட்டல் முதலாளி க்விஸ்மாஸ்டராம்!"
— குல்லூ

பரமசிவம் பிள்ளை. ஊர் கோவில் தர்மகர்த்தா!

"வாங்க அய்யரே... வயலை நோட்டம் போடக் கிளம்பிட்டீங்களா?"

"ஆமா.... ரெண்டு நாள் ஊருக்குப் போறேன். அதான், ஒரு பார்வை பார்த்துட்டுப் போயிடலாம்னு."

"பார்த்து... நீர் ஊர்ல இல்லங்கறது தெரிஞ்சா தேவன் தண்ணிய உறிஞ்சிப்பிடப் போறான்?"

"அதுக்குத்தானே போறது தெரியாம போகப் போறேன்? எவனையாவது காவலுக்கு வைக்கலாம்னா அவ்வளவு பேரும் களவாணிகளா இருக்காங்க. யாரை நம்பறதுன்னே தெரியலை..."

"எதுக்கு வீண் கவலை...? நான் பாத்துக்கறேன், போய் வாரும்."

பரமசிவம் பிள்ளை அப்படிச் சொல்வதில் ராமதீர்த்தனிடம் துளி மகிழ்ச்சி. இடவலமாக வரப்பின் மேல் ஒரு நடை கட்டி விட்டு, அங்கங்கே குனிந்து களைச் செடிகளைப் பிடுங்கிப் போட்டு விட்டு, வீடு திரும்பத் தொடங்குகிறார்.

"பார்த்து பிள்ளை... அவன் பெரிய திருடன்."

"நீங்க போங்க, நான் பாத்துக்கறேன்."

**ரா**மதீர்த்தன் நகர்ந்து கொண்ட மறு நிமிடமே வாழை மரம் ஒன்றின் பின்னால் இருந்து வெளிப்படுகிறார் ஓச்சாத்தேவர். பரமசிவத்திடம், 'கவலைப்படாதே' என்பது போல சமிக்ஞை!

ராமதீர்த்தனும் கல்யாணியும் அம்பாசமுத்திரத்தில் ரயில் ஏறி விட்டதை ஊர்ஜிதம் செய்து கொண்டு கிணற்று மோட்டாரைத் தட்டி விட, நீர் வேகமாகப் பாய்ந்து ஓச்சாத்தேவரின் வாடிய பயிர்களில் நுழைய ஆரம்பித்தது.

பசித்த பயிர்கள் எல்லாம் புத்துயிரோடு அந்த நீரை உறிஞ்சத் தொடங்க, ஓச்சாத் தேவனிடம் மகிழ்ச்சி. நன்றியோடு பரமசிவம் பிள்ளையைப் பார்த்துக் கைகூப்புகிறான்.

"நா செய்யறது நம்பிக்கை துரோகம்தான். ஆனா இந்த துரோகம் பயிருங்களுக்காக! நம்ம பசியை தீக்கறதே, இந்தப் பயிருங்கதான். இதுகளுக்கே பசியெடுக்கைல, நாம வேடிக்கை பார்த்தா எப்படி?"

"விதை போட்டுட்டு, இன்னிக்கு மழை வரும், நாளைக்கு வருமுன்னு நான் வானம் பாத்துப் படற பாடு யாருக்குத் தெரியும்? அய்யர் புண்யம் செஞ்சவர். அவர் கேணி வத்தாம அவரைக் காப்பாத்துது. என் கேணி, பாவக்கேணி... பொட்டுத் தண்ணி இல்லாமப் போச்சு..."

அழுத்துக் கொள்ளும் தேவரைப் பார்த்து சிரிக்கிறார் பிள்ளை.

"ஆண்டவன்கிட்ட சில விஷயங்கள் இருக்கு தேவரே. அதை, ரூவா-அணா-பைசா வால வாங்க முடியாது. தர்மம், நியாயத்தால தான் வாங்க முடியும். அதுல ஒண்ணுதான் மழை. அழுத்துக்கறதை விட்டுட்டு கையைக் கூப்பி அழுங்க. நம்ம கண்ணுத் தண்ணியாவது இந்த மண்ணுக்கு தண்ணிய இழுத்துக்கிட்டு வரட்டும்."

தேவன் சிரம் உடனே வானம் பார்க்கிறது. கூடவே – பிள்ளை அகண்ட வானம் பார்க்கிறார். கைகூப்புகிறார்.

அப்போது அவர்களைப் பார்க்கிறது ஒரு உருவம். அதன் கண்களில் அனற் பழமாய்க் கோபம். நெருங்கி வரும் அந்த விழிகள் ராமதீர்த்தனுடையது. அவரைப் பார்க்கும் தேவரும் பிள்ளையும் ஒரு வினாடி ஸ்தம்பிக்கின்றனர்.

"அய்யரே ஊருக்குப் போகலையா நீங்க...?" – இது பிள்ளை.

"அது இருக்கட்டும் – வானம் பார்த்து கைகூப்பினீரே எதுக்கு? இந்தத் திருட்டுல இருந்து உங்களைக் காப்பாத்திக்கவா?"

பிள்ளை தலைதாழ்ந்து போகிறது.

"தெரியும்யா – நான் பாத்துக்கறேன்னு நீர் சொல்லும்போதே உம்ம யோக்யதை எனக்கு நல்லாத் தெரியும். அதான் விட்டுப் பிடிச்சேன். நீரும்தான் இப்ப களவாணி. இப்படி நம்பிக்கை துரோகம் பண்றதுக்கு உங்களுக்கு எப்படிய்யா மனசு வந்தது?"

"அய்யரே கொஞ்சம் நான் சொல்றதைக் கேளும். இந்தப் பயிருங்களைப் பாரும். எது வேணா வாடலாம். இது வாடலாமா?"

"தண்ணி இல்லாதப்ப இந்த ஆள் எதுக்காகவே சாகுபடி பண்ண ஆசைப்பட்டார்?"

"மழை வரும்னு நம்பித்தான்..."

"இப்படி திருட்டு புத்தி இருந்தா இந்த பூமிக்கு மழை வருமா?"

"தண்ணிய வெச்சுகிட்டே இல்லேன்னு நீர் சொல்றது மட்டும் சரியா? லோபியோட ஊருக்கும்தான் மழை வராது..."

"நான் லோபியா? சரி, நீர்தான் பெரிய பரோபகாரியாச்சே, இவனுக்கு நஷ்டஈடு கொடுத்து உதவ வேண்டியதுதானே? இது என்ன கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கற கதையா?"

"அய்யர்வாள், கொஞ்சம் பொறுமையா கேளும். தண்ணிக்காக நாம இப்படி அடிச்சுக்கக் கூடாது. இது ஆண்டவன் நமக்குக் கொடுக்கற விஷயம்."

"அப்படியா... இதை நம்ம கவர்மென்ட்டு களுக்கும் போய்ச் சொல்லும். தனக்கு மிஞ்சிதான் தருமம்னு பெரிய பெரிய தலைவர்களே அடிச்சுக்கிற தேசத்துல எனக்கு உபதேசமா?"

அய்யரின் கேள்வி, பிள்ளையின் பொட்டில் அடித்தது. மௌனம் அவரை இறுக்கியது.

நமக்கு முன் உதாரணமாகத் திகழ வேண்டியவர்கள் நம் முன் ரணங்களாக இருந்தால் இப்படித்தானே இருக வேண்டி வரும்?

"என்ன பேச்சைக் காணோம்?"

"இனி பேசிப் பிரயோஜனமில்லை அய்யர். பேச அருகதையும் இல்லை."

"புரிஞ்சுண்டா சரி. இந்த முறை உம்மை விட்டுடறேன். இனி இந்த மாதிரி அல்பத்தனம் பண்ணாதேள்."

ஓடிக் கொண்டிருந்த மோட்டாரை நிறுத்தி வாய்க்கால் நீரை வற்ற வைத்து விட்டு, தன் வீட்டுப் பயிர்களைப் பெருமிதமாகப் பார்த்தபடி அய்யர் கிளம்புகிறார்.

மதுரை காந்தி நகரில் பிள்ளை வீட்டுக்குள் நுழைந்தபோது அந்தச் சூழ்நிலையே ராமதீர்த்தனுக்குப் பிடிக்கவில்லை.

சின்ன வீடு – அதற்கே வாடகை ஆயிரத்து இருநூறாம்!

கை, கால்களை சுதந்தரமாய் நீட்டிப் படுக்கக் கூட முடியவில்லை. ஊரிலிருந்து வந்த கசகசப்பு. குளிப்பதற்காக பாத்ரூமுக்குள் போனால் ஒரு தூக்குச் சட்டியில் தண்ணீர். கை கழுவக் கூடப் போதாத தண்ணீரில் குளியல் முடிக்க வேண்டும்.

"என்னம்மா இது... பைப்ல தண்ணி வராதா?"

"பூமில இருந்தாத்தானே வர? வாசல்ல லாரித் தண்ணி வரும் – வரிசைல நின்னு பிடிச்சுக்கணும்."

மருமகள் பேசி, வாயை மூடுமுன் வாசல் பக்கம் லாரி சப்தம்..

"அம்மா, தண்ணி லாரி வந்துடுத்து... நீங்களும் ஒரு குடத்தோட வாங்கோ. அவன் பத்து நிமிஷம்னா பத்து நிமிஷம்தான் இருப்பான். அதுக்குள்ள எவ்வளவு பிடிச்சுக்கணுமோ அவ்வளவு பிடிச்சுக்கணும்."

"வாங்கோ... வாங்கோ..."

மருமகளின் ஓட்டத்தில் ஒலிம்பிக் வேகம்.

கல்யாணி கணவனை ஒரு பார்வை பார்த்துவிட்டு குடத்துடன் கிளம்பினாள். ராமதீர்த்தன் அந்த பிளாட் வீட்டின் பால்கனி வழியாக எட்டிப் பார்க்க, கீழே யுத்தக் காட்சி. 'எனக்கு-உனக்கு' என்கிற ஆவேசங்கள். குடங்கள் மோதிக் குலுங்கும் உக்கிரங்கள்.

புகுபுகுவென்று தண்ணீர் பாயும் குழாய். மேலே நிற்கும் லாரிக்காரன் கையில் ஒரு பெரிய ஸ்பேனர்.

கடிகாரத்தைப் பார்த்தபடி அவன் நிற்கிறான்.

இந்த சண்டைக் காட்சி தனக்கொரு 'துரும்பு' என்கிற பாவனையோடு நிற்கிற அவன், பத்து நிமிடம் முடிந்த நொடியில் ஸ்பேனரால் குழாய் வாயை மூடிவிட்டு, லாரியை வேகமாகக் கிளப்புகிறான்.

"அண்ணே அண்ணே, ஒரு குடம்ணே... ஒரே ஒரு குடம்ணே..."

கூப்பாடும் கூச்சலும் அந்த ஓடும் லாரியினை ஒரு நூறடி தூரம் வரை துரத்த, அவனிடம் கருணையே இல்லை.

கருணை செய்தால் எல்லோருக்கும் தண்ணீர் கொடுத்து முடிப்பது எப்போதாம்?

ராமதீர்த்தன் கனத்த இதயத்துடன் திரும்பும்போது எதிரில் வெறும் குடத்துடன் மாமியாரும் மருமகளும்!

"என்னம்மா?"

"என்னம்மான்னா... இன்னிக்கும் தண்ணி பிடிக்க முடியலை. பத்து நிமிஷத்துல நூறு பேர் தண்ணி பிடிச்சாகணும். முடியுமா என்ன?"

"நானும் பாத்தேன் அந்த கண்றாவியை. வரிசைல நின்னு பிடிக்கக் கூடாதா?"

வரிசைல நின்னா ஒரு மணி நேரமாகும். அதுக்கு லாரிக்காரனுக்கு டைம் கிடையாதாம். அவன் நாப்பது காலனிக்குப் போகணுமாம்."

பெருமூச்செறிகிறார் ராமதீர்த்தன்.

"மாமா, தப்பா எடுத்துக்காதேள். செத்த பக்கத்து வாழைத் தோட்டம் வரைல போய் தண்ணி பிடிச்சுண்டு வந்துடறேளா? குடத்துக்கு ஐம்பது காசு. அவர் ஆபீஸ்ல இருந்து வரதுக்குள்ள தோட்டக் கதவை மூடிடுவா."

வாழ்க்கை ஒவ்வொருவருக்கும் எப்படியெல்லாம் பாடம் கற்பிக்கிறது?

ராமதீர்த்தன் நொந்து கொண்டபடியே இரு குடம் தொங்கும் சைக்கிளை உருட்டியபடி வாழைத் தோட்டத்துக்குக் கிளம்புகிறார். 'ஊருக்குப் போனதும் ஒச்சாத்தேவர் வயலுக்கு வஞ்சனையில்லாமல் தண்ணீர் திறந்து விட வேண்டும்!'



# தபுவுக்குக் கல்யாணம்?

திரைப்பட நகரத்துப் பொய்கைக் கரையோரம் நான் தண்டபாணியைப் பார்த்த போது படுசோகமாக இருந்தான். அழுதிருப்பான் போலக் கண்ணெல்லாம் சிவந்து, வீங்கியிருந்தது. பரிவாகக் கிட்டே போய், ''மேயர் எலக்‌ஷனுக்கு சீட் கிடைக்கலியா தண்டபாணி?'' என்றேன்.

பின்னணியில் மனசு- கொண்டலு - மஞ்சி என்று மூளையில் ஏறாத டைட்டிலுடன் தெலுங்குப் படத்தின் பாடல் காட்சி ஒன்று பளபளப்பாகப் படமாகிக் கொண்டிருக்க, தண்டபாணி, ''இண்டலெல்லாம் வேணாம். நான் நிஜமாவே ரொம்ப ஃபீலிங்ல இருக்கேன்'' என்றான்.

''சொல்லு. என்ன சமாசாரம்?''

''தபுவுக்குக் கல்யாணம் ஆகப் போவுது.''

''நல்ல விஷயம்தானே? அதுக்கு நீ ஏன் ஃபீல் பண்றே?''

''போ கிஷ்டா. லட்சக்கணக்கான தபு ரசிகர்கள்ல நானும் ஒருத்தன்.''

''அடடா! உங்க கனவைக் கலைக்கிற

• சரத்குமார்



• அரவிந்தன் : நிலக்கரி சுரங்கத்தில் படப்பிடிப்பு

புண்ணியவான் யாரு?'' என்றேன் அவசரமாக.

''யாரோ இந்திக்காரப் பணக்காரன். சஜித் நாதியாத் வாலான்னு பேராம்.''

''லண்டன் தொழிலதிபரா?''

''தெரியலை. ஏன் கேக்கறே?''

''இல்லை... இப்ப அதானே ஃபேஷன்?''

''ப்ச். என்ன வாழ்க்கை கிஷ்டா. காதல் தேசம் ரிலீஸ் ஆனதும் முன்ன குஷ்புவுக்கு கோவில் கட்டினாங்களே, அதுமாதிரி வண்ணாரப்பேட்டையில தபுவுக்கு ஒரு சிலை வெக்கலாமான்னிட்டு யோசிச்சிட்டிருந்தோம். எல்லாம் போச்சு.''

''எப்ப கல்யாணம்?''

''சரியா தெரியலை. ஆனா ரொம்ப நாளா லவ்வடிக்கிறாங்களாம்.''

''அப்படிப் போடு.''

''டிசம்பருக்குள்ள கல்யாணம் நிச்சயம்னு ஒரு பம்பாய் பத்திரிகைக்காரன் எழுதியிருக் [illegible].''

[illegible]ணாச்சி, சைடுல ஜோசியம் வேற [illegible]?''

''தபு [illegible]சைடுலேருந்து இதுக்கு எதனா பதில் [illegible]ங்காட்டியும்னு ஆவலா காத்திருந் [illegible].

[illegible]திருக்குமே? எங்களோடது தெய்வீக [illegible]புதான். காதலெல்லாம் இல்லைன்னு?''

''அதெல்லாம் கோடம்பாக்க சமாசாரம். பம்பாய்க்காரங்க ரொம்ப நல்லவங்க. உண்மையை ஒத்துக்குவாங்க. சமயத்துல உண்மை இல்லாட்டியும் ஒத்துப்பாங்க.''

''இப்ப என்னங்கறே? தபு ஒத்துட்டாங்களா?''

''தெரியலை. அவங்க அறிக்கைக்காக ஆவலா காத்துட்டிருக்கேன்.''

''இல்லைன்னுட்டாங்கன்னா, அப்ப வண்ணாரப்பேட்டைல சிலை உறுதி?''

''பின்ன? நான் சுவாதி மாதிரி. நினைச்சதை சொல்லிடுவேன். சொன்னதை செஞ்சிடுவேன்.''

''ரூட்டுக்கு வந்துட்டியா? வாழ்க! சொல்லு. சுவாதி என்ன நினைச்சி, சொல்லி, செஞ்சிருக்கறதா சரித்திரம் சொல்லுது?''

''ஹைதராபாத் ஸ்கூல்ல பிளஸ் டூ படிச்சிட்டிருந்தப்ப, மேல நல்லா படிச்சி, பெரிய ஆளா ஆவணும்னு கனவு கண்டுட்டிருந்தாங்களாம். ஆனா விதி அவங்களை சினிமாவுக்குக் கூட்டிட்டு வந்திரிச்சி இல்லை? 'சே, படிக்க முடியாமப் போயிடிச்சே'ன்னு ரொம்பக் கவலை.''

''அடடா, என்ன ஒரு சோகம்.''

''கேளு. அதனால, ஒரு முடிவு எடுத்திருந்தாங்களாம், அப்பவே. நம்மாலதான் நல்லா படிக்க முடியலை. நல்லா படிக்கறவங்களுக்காவது எதனா ஹெல்ப் பண்ணுவோம் அப்படீன்னுட்டு.''

''என்ன ஒரு உதார குணம்?''



"அதான். இந்த வருஷத்திலேருந்து பிளஸ் டூவுல மாநில அளவுல முதல் ரேங்க் வர்றவங்களுக்கு ஸ்வாதி அவார்டு தரப் போறாங்க."

"பொன்முடிப்பு, பதக்கம் இந்த மாதிரியா?"

"கேட்டேனே. நம்மால அந்த மாதிரியெல்லாம் எப்படி முடியும்? ஏதோ ஏழைக்கேத்த என்ளுருண்டைன்னாங்க."

"சே. நல்ல மனசுப்பா. சர்வ மங்களமும் உண்டாக ஒரு கூட்டுப் பிரார்த்தனை செய்யலாம் போல இருக்கு."

"இன்னொரு பிரார்த்தனையா?"

"வேற யார் பிரார்த்தனை நடத்தறாங்க?"

"சரத்குமார்! நெய்வேலி நிலக்கரி சுரங்கத் தொழிலாளிகள் நலனுக்காகப் பிரார்த்தனை செய்யாத குறை."

"என்ன சமாசாரம்?"

"அரவிந்தன் ஷூட்டிங்குக்காக நெய்வேலி போயிருந்தப்ப அங்க நிலக்கரி சுரங்கத்துல வேலை செய்யறவங்களை சந்திச்சிருக்கார் சரத்குமார். அஞ்சு நிமிஷம் அந்த சுரங்கத்துல நின்னாலே, 'எச்சில் துப்பினா கரிகரியா வருதாம். அவ்னோ டஸ்ட்! அங்க வேலை பார்க்கறவங்களுக்கு மாசா மாசம் மருத்துவ செலவு மட்டுமே நூத்தம்பது ரூபா கிட்டத் தட்ட ஆவுதாம். என்.எல்.ஸி. நிர்வாகம் அதைக் குடுத்துடுதாம். என்ன ஒரு கஷ்ட ஜீவனம் நடத்தறாங்க'ன்னு ரொம்ப வருத் தப்பட்டார்."

"அது சரி. என்எல்ஸியில ஷூட்டிங் நடத்த அனுமதி தர்றதில்லைன்னு கேள்விப்பட்டிருக் கேன். இவங்களுக்கு எப்படி?"

"யூனிட்டுக்கே அது ஆச்சர்யமான விஷயம். தர்றாங்க; தரலை... கேட்டு வெப் போமேன்னு அப்ளை பண்ணியிருக்காங்க. எதிர்பாராதவிதமா ஓகே சொல்லிட்டாங் களாம். ஒரு பாட்டு, மூனு ஃபைட்டு, சில உணர்ச்சிமயமான காட்சிகள்னு சுரங்க பேக் கிரவுண்டுலே சுட்டுத் தள்ளிட்டு வந்திருக் காங்க."

"இத்தனை நாளா தயாரிப்புல இருக் கேய்யா.. சாதாரணமா சரத்குமார் மாசப் பத்திரிகை மாதிரி படம் உடறவரு?"

"பின்ன? என்னா மாதிரி சப்ஜெக்ட் தெரியு மில்லை? இவரு காந்தியவாதி. எதையும் பேசித் தீர்த்துடலாம்ங்கற பாலிஸி உள்ளவர். நேர் எதிர் கேரக்டர் பார்த்திபனுக்கு. பேசறதாவது? தீக்கறதுதான் ஒரே வழின்னு சொல்ற பார்ட்டி! இந்த ரெண்டு துருவமும் மோதும் போது எழுகிற தீப்பொறி இருக்கே..."

"அந்த வெப்பம் தணியத்தான் நக்மாவைப் போட்டிருக்காங்க போல. அது சரி. என்ன, நக்மாவை ஒட்டுமொத்தமா சரத்குமார் குத்தகை எடுத்துட்டாரா? ரகசியப் போலீ ஸுக்கு அப்புறம் இந்தப் படம், அடுத்தப் படத்துலயும் நக்மாதான்னு கேள்விப்பட் டேன்?"

"அதில்லைப்பா. இப்ப ரஜினி படத்துல தொடர்ந்து மீனா வரலையா? கமல் கௌதமிக்கு சான்ஸ் தர்றதில்லையா? சரத், முன்னோர் வழியைப் பின்பற்றுகிறார்னு நினைக்கறேன்."

"முன்னோர் வழின்னதும் ஞாபகம் வருது. பாக்யராஜை ஃபாலோ பண்ணி லிவிங்ஸ்டன் சுந்தர புருஷன் எடுத்தாரே... அப்புறம் எதனா வந்ததாமா?"

"சுந்தர புருஷன் சிட்டில சுமாராத்தான் போச்சுன்னாலும் பி அண்ட் சி பிக்-அப் ஆயிட்டதால சவுத்ரி இப்ப ரொம்ப சந் தோஷத்துல இருக்கார். அவரை விட சந்தோ ஷம் லிவிங்ஸ்டனுக்கு. அகத்தியனோட அடுத்தப் படத்துல வாய்ப்பு வந்திருக்காம்."

"கோகுலத்தில் லிவிங்ஸ்டனா?"

"அட, அந்தப் படம் இல்லைய்யா. 'கோகுலத்தில் சீதை' தீபாவளி ரிலீஸ். இவர் புக்காகி இருக்கறது ஜனவரியில ஆரம்பிக்கப் போற அடுத்தப் படத்துல."

"நல்லா இருந்தா சரி."

"பின்னே? இத்தனை நாளுக்கப்புறமாவது கடவுள் எனக்குக் கண்ணு திறந்தாரேன்னு மனுஷன் உருகிப் போயிட்டாரு. நேத்து ஏவி.எம்.ல பார்த்தேனா? யார்கிட்டயாவது உள்ளத்தை உருக்கறாப்பல நல்ல கதை இருக்குதான்னு கேட்டுட்டு இருந்தார்."

"உடனே எதனா புருடா விட்டிருப்பியே?"

"நீ வேற. அவர் எதிர்பார்க்கறது சுந்தர புருஷனை விட டாப்கிளாஸ் கதை. சவுத்ரியே இன்னொரு படம் தருவார் போலன்னு பேசிக் கறாங்க. அதான் நல்ல கதை தேடிட்டிருக்கார். தினம் தினம் யாராவது கதை சொல்ல வராங் களாம். ஆனா ஒண்ணும் சரிப்படலைன்னு ரொம்ப வருத்தப்பட்டார்."

"உன்கிட்ட எதனா ஸ்டாக் இருக்குமே? எடுத்துவுடவேண்டியதுதானே?"

"நல்ல யோசனைதான். சம்பளத்தை டாலர்ல தருவாங்கன்னா வேணா யோசிக்க லாம்."

**- கிச்சா**

# செய்திகள்,

## வாசிப்பது

# செம்பியன்...

'மேயர் தேர்தலுக்கு மனு தாக்கல் செய்ய ஊர்வலமாகப் போயிருக்கிறார்கள், தி.மு.க.வினர். மிகப் புராதனமான இரு நாற்காலிகள் உள்பட பலவற்றை ஸ்டாலின் ஆதரவாளர்கள் மாநகராட்சி அலுவலகத்தில் அடித்து நொறுக்கியிருக்கிறார்கள். பொதுவாகவே நமக்கு ஊர்வலம்-பேரணி மோகம் தேவைக்கு அதிகமாக இருக்கிறது! இதனால் சமுதாயத்துக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை உணர்ந்து, இந்தக் கலாசாரத்தைக் கைவிடுவது நல்லது.

'சென்னையை சிங்காரச் சென்னை ஆக்குவேன்' என்கிறார் ஸ்டாலின். அழகுபடுத்துவது அப்புறம் இருக்கட்டும்; அசிங்கங்களை அகற்றினாலே நகரம் புதுப்பொலிவு பெறும். கழிவு நீர், பாதாளச் சாக்கடைகளில் தடங்கலின்றிப் பாய வேண்டும். மழை நீர், நகரை ஏரியாக மாற்றாமல் வடிகால்கள் ஒழுங்காக அமைய வேண்டும். ஒரு மழை பெய்தால் சாலை ஆறாகிறது; சாலையின் குண்டு குழிகளில் வாகனங்கள் தடால் தடால் என்று விழுந்து எழுகிறது; டிராஃபிக் ஜாம் ஏற்பட்டு பத்து நிமிஷப் பயணம், ஒன்றரை மணி நேரமாக நீள்கிறது என்றால், அப்புறம் இங்கே அமெரிக்க மாடலில் கார் தயாரானால் என்ன, கொரியா மாடலில் உருவானால் என்ன? எல்லாமே கட்டை வண்டிக்குச் சமானம்தான்!

டி.வி.வேங்கடராமனைத் தாக்கிக் கொள்ளையடித்த கும்பலைச் சேர்ந்த 14 பேர் இதுவரை கைதாகியிருக்கிறார்கள். பாஸ்கரன், விசுவநாதன் ஆகிய இரு குண்டர் தலைவர்கள் மட்டும் இன்னும் 'டிமிக்கி' கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். தி.மு.க. ஆட்சியிலும் சில கொள்ளைகள் நடந்த போதிலும், குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டிக்க வேண்டும் என்ற தீவிரமாவது இருக்கிறது. முந்தைய ஆட்சியில் அந்தப் பிரக்ஞையே இருக்கவில்லை. ஜெ. ஆட்சி இதில் கறுகறுப்புக் காட்டியிருந்தால் டி.வி.வி. வீட்டில் கொள்ளையே நடந்திருக்காது! முந்தைய அ.தி.மு.க. ஆட்சியின்போது அரசு உயர் அதிகாரிகள் பாண்டே, பாண்டா வீடுகளில் புகுந்து கொள்ளையடித்தவர்கள்தான் இப்போது டி.வி.வி. வீட்டிலும் கைவரிசையைக் காட்டியிருக்கிறார்கள்!

அம்பத்தூர் முனிசிபாலிடியில் பெரிய அளவில் ஊழல் நடைபெற இருந்ததைக் கண்டுபிடித்து, திருமதி விஜயா உடனே முதல்வருக்கு 'ஃபாக்ஸ்' செய்தி அனுப்ப, முதல்வர் நடவடிக்கைக்கு உத்தரவிட, லஞ்ச ஊழல் தடுப்புத்துறை உயர் அதிகாரி உமாசங்கர் உடன் செயல்பட்டது மன நிறைவை அளிப்பதாகும். எந்த அரசிலும் குற்றங்கள் நிகழ்வதை அடியோடு தடுத்து விட முடியாது. ஆனால் குற்றச்சாட்டு பிறந்ததும் உடனே விசாரணை நடத்துவது, நடவடிக்கை எடுப்பது என்ற நிலை, குற்றங்கள் குறைய பெருமளவு உதவும். நிச்சயம்.

மகாத்மா காந்தி விருது அறிவிக்கப்பட்ட பிறகு போலீஸாரின் செயல்பாடு தீவிரமடைந்து, பல லட்சம் பெருமானமுள்ள கள்ளச் சாராயம் ஒழிக்கப்பட்டுள்ளது. ஊறலுடன் ஊழலுக்கும் வழிவகுத்த மதுவிலக்கு (தனி) போலீஸ் படை கலைக்கப்பட்டு, அந்தந்த வட்டாரத்தில் கள்ளச் சாராயம் காய்ச்சப்படுவதற்கும், அதை அருந்துவதால் ஏற்படும் மரணங்களுக்கும் அந்தந்த வட்டார இன்ஸ்பெக்டர்களையே பொறுப்பாளிகளாக்கியது சிறந்த ராஜதந்திரமே. 'இப்படி கள்ளச் சாராயத்துக்குப் பல மக்கள் அடிமைப்பட்டுப் போயிருக்கிறார்களே' என்று சில தினங்கள் முன்பு முதல்வர் வருத்தப்பட்டிருக்கிறார். இடையில் மதுவிலக்கு ரத்தாகாமலிருந்திருந்தால், இரண்டு தலைமுறை மதுப் பழக்கத்துக்கு அடிமையாகாமலே தப்பியிருக்கும். இனியேனும் சோதனைகளைக் கண்டு மனம் தளராமல் உறுதியாக இருந்தால் இளைய தலைமுறை மது அரக்கன் பிடியில் சிக்காமல் காப்பாற்றலாம். IMFL கதை வேறு. நமது முதல் கவனம் ஏழை களைப் புதை சேற்றிலிருந்து மீட்பதாகத்தான் இருக்க வேண்டும்.



# நெல்சன் மண்டேலாவின்

● டி..ஆர். பாலசந்தர்,
திருநெல்வேலி - 6.

? ‘உப்பு தின்றவன் தண்ணீர் குடித்தே ஆக வேண்டும். கண்ணப்பனைச் சிறையில் தள்ளுங்கள்!’ என்கிறாரே திருநாவுக்கரசு?

! ‘ஜெ’ விஷயத்திலும் பொருந்துமே! யோசிக்க வேண்டாமோ!

● தேவந்தி துரைராஜ்,
திருப்பத்தூர்.

? ஆசிரியர் தினத்தன்று அதைப் பற்றிய தலைப்புச் செய்தி எந்த நாளிதழிலும் வரவில்லையே...?

! மறுநாள் வந்ததே! ‘நல்லாசிரியர் விருது’ என்று வழங்கும்போது ‘விருது பெறாதோர் நல்லாசிரியர் அல்ல’ என்கிற தொனி ஏற்படுகிறது. இதைத் தவிர்க்க, நல்லாசிரியர் விருதுக்கு ‘டாக்டர் ராதாகிருஷ்ணன் விருது’ என முதல்வர் பெயர் மாற்றியதாகச் செய்தி வந்ததே.

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி,
கும்பகோணம்.

? மாநிலத் தந்தையின் (கருணாநிதி) தனயன் (ஸ்டாலின்) மாநகரத் தந்தையாகும் வாய்ப்பு எப்படி உள்ளது?

! உதயசூரியன் போல் பிரகாசமாக!

● வி. சத்தியப்ரியன்,
சென்னை - 15.

? ஈராக் நாட்டின் ராணுவ தளங்கள் மீது அமெரிக்காவின் ஏவுகணைத் தாக்குதல் பற்றி...?

! மறுபடியும் தேர்தலில் நிற்கிற கிளிண்டன், தமது இமேஜை மக்கள் மத்தியில் உயர்த்திக் கொள்ள ஓரளவு உதவியிருக்கலாம். ஆனால் உலக நாடுகளின் தலைவர்கள் நோக்கில் கிளிண்டனின் இமேஜ் வீழ்ச்சி அடைந்துவிட்டதே!

● மேலை பழ. நாகப்பன்,
சென்னை - 41.

? சிங்கர் கோப்பை...?

! தகுதியுள்ள அணிக்குப் போயிருக்கிறது. வாழ்த்துவோம்.

● ஆரூர் அரசு,
இலவங்கார்குடி அஞ்சல்.

? ‘ஆச்சி’யின் மீது ரஜினியின் செயல்பாடு எப்படிப் பட்டது?

! அது, மெகா சூப்பர் பெருந்தன்மை.

● பாலாஜி, குடந்தை - 1.

? ஏமாற்றுபவர்கள் இருப்பதால் மக்கள் ஏமாறுகிறார்கள் என நெடுஞ்செழியன் சொல்கிறாரே?

! ஒரு திருத்தம் : ‘இருந்ததால்’. இன்னொரு திருத்தம் : ‘ஏமாந்தார்கள்’!

● பால்சோப்ரா,
சென்னை - 89.

? என்னமோ ஜனநாயகத்தோட நாலாவது தூணே பத்திரிகைங்கதான் - நாட்டின் தலைவிதியையே அவங்கதான் நிர்ணயிக்கிறாங்கன்னு பாமரத்தனமா நாங்கள்ளாம் நம்பிக்கிட்டிருந்தோமே... ஒரு சினிமாவைக் கூட பத்திரிகைகளால ஒண்ணும் பண்ண முடியாது என்கிறாரே சுஜாதா...? நாட்டிலே என்ன குப்பை கொட்டப் போறீங்க?

! ஜெ கூட அப்படித்தான் - பத்திரிகைகளால் ஒன்றும் குப்பை கொட்ட முடியாது என்று நினைத்தார். அதனால் பத்திரிகைகளை மதிக்காமலேயே இருந்தார். ஆனால், இப்போது...? வரிந்து வரிந்து பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதுகிறாரே...!

● கே. சஞ்சீவிபாரதி,
கலிங்கியம் அஞ்சல்.

? புகார்களை நிரூபித்தால் அரசியலை விட்டே விலகத் தயார் என்று கண்ணப்பன் கூறியுள்ளாரே?

! நிரூபிக்க முடியாத அளவுக்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டாரோ என்னவோ? இதற்குத்தான் தாமதத்தைத் தவிர்க்க வேண்டும் என்று சொல்வது...

● பழ. சேதுராமன்,
மதுரை - 2.

? இழுத்து மூடப்பட்ட சினேகம் கம்பெனி... இழுத்துக்கொண்டிருக்கும் ஜெயலலிதா கம்பெனி... ஒப்பிடுக.

! ‘சினேகம்’ முறிந்ததால் மக்கள் ஏமாந்தார்கள். ஜெ. கம்பெனியில் ‘சினேகம்’ முறிப்பதாக அறிவித்து மக்களை ஏமாற்ற முயன்று வருகிறார்.

இரண்டுமே குறுகிய காலத்தில் அகப்பட்டதைச் சுருட்ட முயன்றவை!

இரண்டுக்குமிடையேயான வித்தியாசம் கைது செய்வதில் தான்!

● தேனி முருகேசன், தேனி.

? அ.தி.மு.க.வினர் வழக்கு முடிய பதினெட்டு ஆண்டுகளாகும் என்று நெடுஞ்செழியன் கூறியிருப்பது பற்றி...?

! பதினெட்டு ஆண்டுகள் ஆகும் அளவுக்கு, வழக்குகளின் எண்ணிக்கை இருக்

• காதலும்...



• ...கல்யாணமும்



• யோசனையின்றி...



• இருவித இமேஜ்!



# காதல் பற்றி...?

கிறது - அத்தனை குற்றங்கள் புரிந்திருக்கிறார்கள் என்பதைத்தான் ஒப்புக் கொண்டு சொல்லியிருக்கிறார் நாவலர்!

● சி. தெ. இளமுருகன், சென்னை - 39.

*? தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்கு தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத அய்யரின் பெயர் வைத்தால் நன்றாக இருக்காதோ...?*

! சரியான தேர்வுதான். தமிழ்த் தாத்தா சிலைக்குப் பீடம் நிறுவ ரூ. 50,000 உடனடியாக ஒதுக்கிய முதல்வர் கவனிக்க வேண்டும்.

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

*? சுடுகாட்டுக்குப் போனாலும் போவோமே தவிர ஜெயலலிதாவை விட்டுப் போக மாட்டோம் என்கிறாரே சேடப்பட்டி முத்தையா?*

! சுடுகாட்டில் சுருட்டுவதற்கு இன்னும் மிச்சம் இருக்கிறதா என்ன...!?

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? காதல் தேசம் தப்பு; சிறைச்சாலை தப்பு - எப்படி....?*

! பின்னதில் பூ; முன்னதில் ப்பூ!

● மணிப்புறா, திருச்சி - 8.

*? 'பத்திரிகையாளர்கள் என்னை முதல்வராகக் கருதுவதை விட, நண்பனாகக் கருதுவதையே மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கின்றேன்...' என்று கருணாநிதி சொல்கிறாரே?*

! பத்திரிகையாளர்களும் தன்னலம் பாராத நண்பர்களாகப் பழகினால் சரிதான்.

● கே. கண்ணன், கோவை.

*? தி.மு.க. ஆட்சி ஒழுங்காக நடைபெறுவது ஜெ.வுக்குப் பயந்தா? வை.கோ.வுக்குப் பயந்தா?*

! மக்களுக்குப் பயந்து!

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? முன்னாள் முதல்வர் ஜெயலலிதா திருச்சியில் அரசு விருந்தினர் விடுதியில் தங்கியபோது குளியலறை புதுப்பிக்க மட்டும் 65 லட்சம் செலவானதாமே?*

! அதுவும் முழுமையாக அந்தப் பணிக்குச் செலவழிக்கப் படாமல் பலர் 'ஆதாய'த்துக்குத்தான் பயனாகியிருக்கிறது. 65 லட்சத்துக்குக் கணக்குதான் இருக்கிறது!

● அஜார், தேனாம்பேட்டை. ❑

*? நெல்சன் மண்டேலா காதல் வலையில் சிக்கி இருப்பது பற்றி...?*

! 'இப்படிக் காதல் வாழ்க்கை நடத்த வேண்டாம் - முறையாகத் திருமணம் செய்து கொள்ளுங்கள் அல்லது பிரிந்து விடுங்கள்...' என்று அவரை மதகுருமார்கள் எச்சரிக்கிறார்கள். பிரிட்டனிலோ, இளவரசர் சார்ல்ஸ், கமீலாவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை; காதலர்களாகவே இணைந்து வாழ்வோம் என்கிறார்!

● ந. சிவாயமூர்த்தி, பெருந்துறை.

*? இலங்கை அகதிகள் வரவு பற்றி அதிகச் செய்திகள் காணோமே... இருட்டடிப்புச் செய்யப்படுகிறதா?*

! இல்லையே! ராமேஸ்வரத்தில் அகதிகள் வருகை போல் செய்திகளும் வந்தவண்ணம் தானே இருக்கின்றன. இலங்கை ராணுவத்தின் அத்துமீறல்கள் குறித்தும் செய்திகள் வருகின்றன.



• பூ! ப்பூ!!!



• மெகா - ஸுப்பர்!



• உதவிய தாமதம்..?

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
அஜார், 'அமான்ஸ்',
117, எல்டாம்ஸ் சாலை,
சென்னை - 600 018.

# மற்றுமொரு சவால்! பொருளாதாரப் பெருக்கத்தில் முயல்!!

பார்ப்பதற்கு அழகானதும் ரம்மியமானதுமான சிறு முயலை இறைவன் படைத்தான். ஆமை முயலுக்கு சவால் விட்டபோது உலக பொருளாதாரம் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே இருந்தது. இன்று பலமுனைகளில் உலக பொருளாதாரம் வளர்ச்சியடைந்து வரும் நிலையில் முயலும் உலக பொருளாதார வளர்ச்சியிலும் தனிமனித பொருளாதார வளர்ச்சியலும் தன் பங்களிப்பை சிறந்த முறையில் செய்து வருகின்றது. தனிமனித பொருளாதார வளர்ச்சியில் "அங்கோராஸ் அக்ரோ பிரைவேட் லிமிடெட்" என்ற நிறுவனம் கீழ்காணும் திட்டத்தின் மூலம்தன பங்களிப்பை செய்து வருகின்றது.

| திட்டம் | | | | | 2-ம் வருட முடிவில் இடைக்கால வருமானம் | | 5-ம் வருட முடிவில் இறுதி வருமானம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| திட்டம் | யூனிட்டுகளின் எண்ணிக்கை | முதலீடு | 5 வருடத்திற்கு உத்திரவாதப் படுத்தப்பட்ட வருமானம் | வருடங்களுக்குப் பிறகு திரும்ப கிடைக்கும் முதலீடு | முயல்கள் எண்ணிக்கை | எதிர் பார்க்கப் படும் வருமானம் | முயல்கள் எண்ணிக்கை | எதிர் பார்க்கப் படும் வருமானம் |
| A | 1 | 5000 | 1050 | 5000 | 50 | 5000 | 150 | 15000 |
| B | 5 | 25000 | 5250 | 25000 | 250 | 25000 | 800 | 80000 |
| C | 10 | 50000 | 10500 | 50000 | 600 | 60000 | 1750 | 175000 |
| D | 20 | 100000 | 21000 | 100000 | 1250 | 125000 | 3600 | 360000 |
| Mini Giant | | 2000 | 420 | 2000 | 20 | 2000 | 60 | 6000 |

## சிறப்பு அம்சங்கள்

- மிகக் குறைந்த முதலீடு ரூ. 5000/- (மினிஜயன்ட் ரூ. 2000/-)
- உத்தரவாதமிட்ட 21% வருட வருமானம் பின்தேதியிட்ட காசோலைகளாக (5 வருடத்திற்கு)
- 5 வருட இறுதியில் பின்தேதியிட்ட காசோலையாக திரும்ப கிடைக்கும் முதலீடு.
- 2-ம் வருட முடிவில் இடைக்கால வருமானம் 50 முயல்கள் (ரூ. 5000/- கணக்கிடப்பட்டது) 5-ம் வருட முடிவில் இறுதி வருமானம் 150 முயல்கள் (ரூ. 15,000/- கணக்கிடப்பட்டது) பின்தேதியிட்ட காசோலைகளாக.
- ஒரு வருட முடிவில் திட்டத்திலிருந்து விடுபடும் வசதி.
- விசா/மாஸ்டர் கார்டுகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

## அங்கோராஸ் பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்

- மிகக் குறைந்த முதலீடு ரூ. 10,000/- வட்டி 24% வரை. + காப்பீடு + சிறப்பு ஊக்கத் தொகை.




**ANGORAS AGRO PVT. LTD.**
703, Spencer Plaza,
769, Anna Salai,
Madras - 600 002.
Tel : 8522176/8525482
Fax : 044-8522176

**ANGORAS FINANCE & INVESTMENTS**
68, Gandhi Road,
Near National Theatre,
Tambaram West,
Madras - 600 045.

# ஜாலி போட்டி – 8

## பரிசு ரூ.5000/-

பள்ளிக்கூட வயசில், பரீட்சை பேப்பரில் 'பொருத்துக' என்றொரு பகுதி கேட்டிருப்பார்களே, ஞாபகமிருக்கிறதா? இந்த வார ஜாலி போட்டி, அந்த விதம் தான்.

*12.9.96* தேதியிட்ட காலை தினசரிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சில செய்திகள் அருகில் இரு பிரிவாகப் பிரித்துத் தரப்பட்டிருக்கின்றன. ஒன்றுக்கொன்று தொடர்புடைய செய்திகளை இனம் சேர்த்து, கூப்பனில் நிரப்பி (எண்களையும் எழுத்துக்களையும் மட்டும் குறிப்பிட்டால் போதும். உதாரணமாக இடப்புறக் கட்டத்தில் '1'ம் வலப்புறம் 'D'ம் பொருந்துவதாகக் கருதினால் '1-D' எனக் குறிப்பிடவும்) *30.9.96*க்குள் அனுப்புங்கள். சரியான விடை எழுதினால் பரிசு ரூ.5000/- பலர் சரியாகச் செய்தால், குலுக்கலில் ஒருவருக்குப் பரிசு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**ஜாலி போட்டி – 8**

பொருத்தமான சேர்க்கை:

பெயர்:......................................

முகவரி:......................................

......................................

......................................

| | |
|---|---|
| 1. உள்ளாட்சித் தேர்தல் கண்காணிப்பு | A. கு.ப.கிருஷ்ணன் |
| 2. நீதிபதி முன் ஆஜர் | B. இருவர் பலி |
| 3. காங்கிரஸ் பொதுக்குழு | C. சி. சுப்பிரமணியம் |
| 4. ஐகோர்ட்டில் வழக்கு | D. முதல்வர் 15 ஆயிரம் உதவி |
| 5. இடி, மழை | E. வாஜ்பாயி |
| 6. "இளைஞர்களுக்கு ராவ் வழி விட வேண்டும்" | F. கருணாநிதி |
| 7. தமிழ்நாட்டு பக்தரின் அமர்நாத் சோகம் | G. வாகன மறுபதிவு |
| 8. "தொண்டர் படுகொலை வேதனைச் செய்தி என் நெஞ்சை சுடுகிறது." | H. லியாண்டர் பெய்ஸ் |
| 9. "குஜராத் அரசை டிஸ்மிஸ் செய்தால் கடும் விளைவுகள் ஏற்படும்!" | I. தலைமைக்கு ஆபத்து |
| 10. "மீண்டும் மோத விரும்புகிறேன்." | J. 150 பார்வையாளர்கள் |



• உகாண்டா அதிபர் முஸவேனி

# ஒளிவிடுமா முத்து?

'இடி அமீன்' - இந்தப் பெயரை நினைவிருக்கிறதா? உகாண்டா நாட்டு மக்களைப் பீதியடையச் செய்த பெயர். அந்த நாட்டின் சர்வாதிகாரியாக கோலோச்சியவர் பின்பு நாட்டை விட்டே துரத்தப்பட்டவர். அவரைப் பற்றி '70களில் வெளியான செய்திகள் ரத்தத்தை உறையவைப்பவை. மனித மாமிசத்தை விரும்பிச் சாப்பிடுபவர் அவர் என்பது அவற்றில் தலையாயது.

போகட்டும். உகாண்டா இப்போது எப்படி இருக்கிறது?

உகாண்டா பாராளுமன்றத்துக்கு 274 உறுப்பினர்கள். 1962 அக்டோபரில் அந்த நாடு விடுதலை அடைந்தது. அப்போது பிரதமராக இருந்தவர் டாக்டர் மில்டன் ஒபொடே. 71ல் இடி அமீன் அவரைப் பதவி இறக்கி, சர்வாதிகாரியானார். அவரது உருவம் மட்டுமல்ல, உள்ளம், சிந்தனை எல்லாமே பயங்கரமானவை. மக்கள் பொறுத்துப் பார்த்தார்கள். பொங்கியெழுந்தார்கள். '79-ல் அவரைத் தூக்கி வீசினார்கள். நாட்டை விட்டே ஓடிப் போனார். தொடர்ந்து லுலே என்பவரும் பினாஸியா என்பவரும் சிறிது காலம் ஆண்டபோதும் குழப்பமான நிலைதான். 1980-ல் அதிபர் தேர்தல் நடைபெற்றது. அதில் முன்னாள் பிரதமர் ஒபொடே தேர்தலில் வென்று அதிபர் ஆனார்.

அதிபராக இடிஅமீன் இருந்தபோது அவரை எதிர்த்துப் போராடியவர்களில் ஒருவர் முஸவேனி என்பவர். உகாண்டா ராணுவத்தின் ஒரு பிரிவையும், உகாண்டா மீது படையெடுத்த தான்ஸானியா போராளிகளில் ஒரு பிரிவையும் உள்ளடக்கிய "ஃபிரண்ட் ஃபார் நேஷனல் ஸால்வேஷன்" என்ற அமைப்பை உருவாக்கியவர்.

உகாண்டா மீது தான்ஸானியா பாய்ந்ததற்குக் காரணமே இந்த இடிஅமீன்தான். பக்கத்து நாடான தான்ஸானியா எல்லைக்குட்பட்ட ககேரா என்ற இடத்துக்குக் குறிவைத்தார் இடி அமீன். தான்ஸானியா படையெடுத்தது. இடி அமீனின் பொன்னாசை, பெண்ணாசை நிறைவேறியது போல மண்ணாசை நிறைவேறவில்லை.

முஸவேனி விவகாரத்துக்கு வருவோம்.

ஒபொடேவின் கீழ் பாதுகாப்பு அமைச்சராகக் கொஞ்ச காலம் இருந்த பின்பு, அதிபரை எதிர்த்து, தானே படைதிரட்டினார். கொரில்லா படை.

இதற்கிடையில் ஜெனரல் டிட்டோ ஒகெல்லோ என்பவரின் தலைமையில் ராணுவப் புரட்சி நடந்து ஒபெடே வீழ்ந்தார். டிட்டோவால் முஸவேனியின் அமைப்பை வெற்றிகரமாக எதிர்கொள்ள முடியவில்லை. '86ல் முஸவேனி கம்பாலாவை (தலைநகர்)க் கைப்பற்றி, அதிபரானார்.

இந்த ஆண்டு மே மாதம் 9-ம் தேதி உகாண்டாவில் அதிபர் தேர்தல் நடைபெற்றது. அந்நாட்டு அரசியல் சட்டப்படி (அப்படி ஒன்று ஒப்புக்காக இருக்கிறது, நம்புங்கள்!) அதிபர் தேர்தலில் கட்சி இருந்தாலும் யாரும் கட்சி சார்பாகப் போட்டியிட முடியாது. தனிநபராகத்தான் போட்டியிட வேண்டும். ஆனால் மக்களுக்கு அவர்களின் கட்சி முகவரி தெரியும்!

முஸவேனி, ஸெமோகிரிரி, ஸிபிரிஸி (பல்கலைக் கழக பேராசிரியர்) என்று மூன்று பேர் களத்தில் இறங்கினார்கள்.

முஸவேனி பெரும்பான்மையான வாக்குகள் பெற்று அதிகாரபூர்வமாக உகாண்டாவின் அதிபர் ஆகியிருக்கிறார்.

இவர் ஆக்கபூர்வமாக ஏதாவது செய்வார் என்று மக்கள் எதிர்பார்க்கிறார்கள்.

உகாண்டா நாட்டுக்கு 'ஆப்பிரிக்காவின் முத்து' என்று செல்லப் பெயர் உண்டு.

இந்த முத்து ஒளிர்வதும், மங்குவதும் இப்போதைக்கு முஸவேனியின் கையில்.

— ராணிமைந்தன்

# ஹலோ சுகமா?

என்னோட நாப்பத்தஞ்சு வயசு பாய் ஃபிரெண்ட் ஒருத்தர், ஒரு ஹிந்திப்படத்தோட ஆடியோ கேஸட் குடுத்து, "இதுல பூபேன் ஹஸாரிகான்னு ஒருத்தர் பாடியிருக்கார். கேளு. ஒரு சாதாரண மனுஷத் தொண்டைலேருந்து இப்படி ஒரு குரல் எப்படிப் பிறக்கும்னு ஆச்சர்யமா இருக்கு!" அப்படின்னார்.

கேட்டேன். அவர் சொன்னா மாதிரி நல்லாத்தான் இருந்தது. ஆனா, தொண்டைக்கும் குரலுக்கும் சம்பந்தமில்லை. குரல், கடவுள் குடுக்கற விஷயம். ஆனா, குரல் ஒழுங்கா இருக்கறதுலேருந்து குடல் ஒழுங்கா இருக்கறது வரைக்குமான கண்ட்ரோல் போர்டு தொண்டையிலதான் இருக்குங்கறது மறுக்க முடியாத விஷயம். தொண்டையைப் பாதுகாக்கறது ரொம்ப அவசியம்.

உடனே ஐஸ் வாட்டர் குடிக்காதே, ஐஸ்கிரீம் சாப்பிடாதேன்னு ஆரம்பிச்சிடுவேன்னு பயப்படாதீங்க.



காது, மூக்கு, வாய் – இந்த மூணு (அஞ்சு!) வழியாகவும் உள்ளே போகக்கூடிய எந்த ஒரு அன்னியப் பொருளும் முதல்ல தொண்டைக்குத்தான் போகுது.

# தொண்டைக்குத் தொண்டு செய்வோம்!

நெஞ்சுக்குழின்னு நிறைய சினிமாப் பாட்டுக்களில் கேட்டிருப்பீங்களே? அங்க போயி, அப்புறம்தான் உள்ளே போகும்.

அப்படி உள்ளே போகறப்போ, உணவுப் பொருள்களாகட்டும்; வேறெதுவாகட்டும் – நாம என்ன நூறு பர்ஸன்ட் சுத்தமாவா எடுத்துக்கறோம்?

வைரஸ் கிருமிகள், பாக்டீரியா கிருமிகள் – இவையெல்லாம் தொண்டைல உட்கார்ந்துடும். ரொம்ப சேஃப்டியான பிளேஸ் அது. மெத்துமெத்துனு ஜோரா இருக்கும் போல இருக்கு அதுங்களுக்கு.

கொஞ்சம் கொஞ்சமா இந்தக் கிருமிகள் நிறைய சேர்ந்ததும் வேலை காட்ட ஆரம்பிச்சுடும். முதல்ல லேசா எரியறாப்பல இருக்கும். அப்புறம் எச்சில் முழுங்கினா வலிக்கும். பேச முடியாது. தொண்டை கட்டிக்கும்!

உடனே நாம ஏதாவது சுக்குக் கஷாயம் வெச்சி சாப்பிடுவோம். கொஞ்ச நேரத்துக்கு இதமா இருக்கும். பின்னாடி மறு[illegible] வலை காட்ட ஆரம்பிச்சிடும்.

சுக்கு உடம்புக்கு நல்லதுதான். ஆனா கஷாயம் குடிச்சதும் நிவாரணம் தெரியறாப்பல இருக்கறதுக்கு அது மட்டும் காரணமில்லை. கஷாயத்தோட சூடுதான்!



''தலைவரே... அடுத்து ஜெயிலுக்குப் போறவர் நீங்கதான்னு எதிர்கட்சி ஆளு போன் பண்ணி கிண்டல் பண்றான்...''

''எப்படி...''

''உங்க தலைவர் பகவத்கீதை வாங்கிட்டாரா'ன்னு கேட்கறான்!''

– எஸ்.எஸ். பூங்கதிர்

---

ஐஸ் வாட்டர் ஏன் சாப்பிடக் கூடாதுன்னு சொல்றாங்க தெரியுமா? அதனால கிருமிகள் உற்பத்தி ஆகிறதில்லைதான். ஆனால் இந்த பாக்டீரியா இருக்கே, அது ரொம்ப சொகுசான கிருமி! ஃபிரிட்ஜ்ல வெச்சா எப்படி காய்கறிகள் ஃப்ரெஷ்ஷா இருக்குமோ, அது மாதிரி ஜில் தண்ணி பட்டதும் அதுங்களுக்குக் கொண்டாட்டமாயிடும். அதிகமா துள்ளும். அதனாலதான் அவாய்ட் பண்ணச் சொல்றது.

அப்புறம், எப்பவாவது இருமல் வந்திச் சின்னா கண்டுக்காம விடாதீங்க. 'உடனே ஒரு இருமல் மருந்து குடிச்சாப் போறது'ன்னு கேஷுவலா எடுத்துக்காதீங்க.

இருமல்ங்கறது ஒரு வியாதி இல்லை. ஆனா உள்ளுக்குள்ள ஏதோ ஒரு வியாதி உற்பத்தி ஆகிட்டிருக்குன்னு நமக்கு அலாரம் குடுக்கறது தான் இருமல்! ரெண்டு நாளுக்கு மேல இருமல் இருந்தா உடனே டாக்டரைப் பார்த்துடறது பெட்டர்.

கவனிக்காம விடறதால வியாதி வளர்வது மட்டுமில்லை. இருமி, இருமி தொண்டை புண் ஆயிடும்! புண் வந்ததுன்னா கிருமிகள் சேர்ந்துடும். அப்புறம் ஆயிரம் பிரச்னை ஆட்டமேட்டிக்கா வரத் தொடங்கிடும்.

தொண்டையை கவனிக்கறது சுலபம். கூடியவரைக்கும் வாயை மூடியே வெச்சிட்டிருக்கறது அதுல ஒரு முக்கியமான வழி. தூசி, கிருமி தவிர்க்கப்படுங்கறது ஒருபக்கம்... எதும் பேசி வம்புல மாட்டிக்காமலும் இருக்கலாம்!

ரெண்டாவது, உணவு விஷயத்துல கட்டுப்பாடு. கண்ட இடத்துல வாங்கி சாப்பிடறதை நிறுத்திடணும். அதே மாதிரி கண்ட தண்ணியைக் குடிக்கக் கூடாது. கொதிக்க வெச்சி, ஆறவெச்சின்னு எல்லாரும் சொல்வாங்க. அவ்ளோ தூரம் எல்லாராலும் எப்பவும் முடியறதில்லை. குறைந்தபட்சம் குடிக்கற தண்ணி சுத்தமா இருக்கான்னு பார்த்துக்கணும்.

தொண்டைல இருக்கற நரம்புகள் ரொம்ப சென்ஸிடிவானவை. அதிகம் கத்திப் பேசக் கூடாது. மைக் பிடிச்சி கத்திப் பேசிட்டு, உடனே சோடா குடிக்கிறாங்களே, நம்ம அரசியல்வாதிகள்... அது தப்பு. நிறைய சோடா குடிச்சா, அதுல இருக்கற கார்பன்டை ஆக்ஸைடு தொண்டையை பாதிக்கும். பதிலா, பால் சாப்பிடலாம்.

முக்கியமான இன்னொரு விஷயம். மூச்சுக்குழல், பேச்சுக்குழல், உணவுக் குழல்னு தொண்டைலேருந்து தொடங்கி சில சமாசாரங்கள் உள்ளுக்குள்ள போகுது. இவை, பிராட்கேஜ் ரயில் பாதைகள் மாதிரி. ஒரு சின்ன தடங்கல் வந்தாலும் இதுல பிராப்ளம் தான்.

உதாரணத்துக்கு, சிகரெட் பிடிக்கறவங்களுக்கு மூச்சுக் குழல் சுத்தமா இருக்காது. கரி படிஞ்சி, கன்றாவியா பாதிக்கப்பட்டு இருக்கும். உணவுக் குழல்ல போக வேண்டிய சாதமோ வேறெதுவோ தடம் மாறி இதுல போச்சுன்னு வெச்சிக்கங்க... சாதாரணமா எல்லாருக்கும் புரை ஏறும். இருமல் வரும். தண்ணி குடிச்சா நின்னுடும். ஆனா, தொடர்ந்து சிகரெட் பிடிக்கறவங்க கதி ரொம்பப் பாவம்! அவங்க மூச்சுக்குழல் பாதிக்கப்பட்டிருக்கும் அப்படிங்கறதால, இருமல் வந்தா லேசுல நிக்காது. குழல்ல தவறிப்போன சோற்றுப் பருக்கை சுலபமா உள்ள போக முடியாம வழி அடைச்சிட்டிருக்கும். இருமல், நரக வேதனையா இருக்கும்! இருமிட்டே இருந்தா, நெஞ்சு நரம்புகள் பாதிக்கப்படும். சமயத்துல புண் ஆகி வாய்ல ரத்தம் வரும். இந்த ரிஸ்கெல்லாம் வேணாம்னா, தம்மடிக்காம இருங்க!

- சுமி

---

''உங்களைக் கட்சிலேருந்து தலைவர் நீக்கிட்டாரே! அடுத்து என்ன செய்யப் போறீங்க?''

''ஏதாவதொரு பத்திரிகைல தலைவரைக் கடுமையா விமர்சிச்சு தொடர் கட்டுரை எழுத வேண்டியதுதான்.''

– டி.என். பாலகிருஷ்ணன்



# சுஜாதா பக்கம்



தொலைக்காட்சியில் மேனகா காந்தியின் 'தலைகளும் வால்களும்' (Heads and Tails) வாராந்திர நிகழ்ச்சியைப் பார்க்கிறீர்களோ? மிருகங்களின் மேல் அன்பு கொள்ள வேண்டும்; அவைகளைத் துன்புறுத்தக்கூடாது எனும் உயர்ந்த நோக்கத்துடன் அவர்கள் காட்டும் சில காட்சிகள் நடுங்க வைக்கின்றன. ஆடுகளை வெட்டுவதும், மாடுகளை மந்தை மந்தையாக லாரியில் அடைப்பதும், கோழி தலையில்லாமல் துடிப்பதும் - இதெல்லாம் காட்டித்தான் ஆக வேண்டுமா என்று கேட்கத் தோன்றுகிறது. இதைப் பார்த்து பூசாரிகளும் கசாப்புக் கடைக்காரர்களும் திருந்துவார்கள் என்று தோன்றவில்லை. அவர்கள் தினம் தினம் ரத்தப் பிரவாகம் பார்த்துப் பழகினவர்கள்.

மிருகங்களைக் கொல்வது இரண்டு வகை. உணவுக்காக, பக்திக்காக. முதல் வகையைத் தடுக்க மனித சமுதாயத்தின் உணவுப் பழக்கமே மாற வேண்டும். இரண்டாம் வகையைக் குறைப்பதற்கு எஸ்.பி.சி.ஏ சட்டங்கள் நிறைய இருந்தாலும் எளிய மக்களின் ஆதார நம்பிக்கைகளுடன் அவை குறுக்கிடும்போது, நம்பிக்கைகளே வெல்கின்றன. பலி, உலகின் எல்லா மதங்களிலும் இருந்திருக்கிறது. பலப் பல வகைகளில். பொதுவாக ஆட்டுக்கடா, எருது, எருமை போன்றவைகளை பலி கொடுத்துவிட்டு, கடவுளை சந்தோஷப்படுத்தி, அவற்றின் வலிமையையும் ஆண்மையையும் தாம் பெற்றுக் கொள்ளும் எளிய குறிக்கோளில்தான் புராதன பலிகள் இருந்திருக்கின்றன. நரபலி கூட, முதல் வேளாண் மக்களிடம் இருந்தது. கிரேக்க, ரோமானியர், யூதர்கள், சைனா, ஜப்பான் தேசத்தவர் எல்லாரும் ஆரம்பத்தில் நரபலி பழகியிருக்கிறார்கள். வேதகாலத்தில் 'புருஷமேதம்' சொல்லப்பட்டிருக்கிறது.

பலி கொடுக்கப்படும் அப்பாவியை மிக அருமையான உடைகளால் அலங்கரித்தார்கள். அவர்கள் அழகுக்காகவும் இளமைக்காகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கடவுளுக்கு எல்லாமே சிறந்ததாக இருக்க வேண்டுமல்லவா? அவர்களை நீரில் மூழ்க வைத்தோ, உயிருடன் புதைத்தோ அல்லது கழுத்தில் வெட்டி ரத்தம் சிந்த வைத்தோ கொன்றார்கள். உதிரம் நிலத்திலோ, பலி பீடத்திலோ விழ வேண்டும். அப்போதுதான் கடவுளுக்கும் சந்தோஷம் என்று நம்பினார்கள்.

பலி கொடுத்ததைப் பொதுவாக, முழுவதும் கடவுளுக்கே அர்ப்பணித்தார்கள். அல்லது ரத்தம் சிந்தியதும் மிஞ்சியதை எல்லோரும் கூடிச் சாப்பிட்டார்கள் அல்லது நெருப்பில் எரித்தார்கள் (புகை மேலே போய் கடவுளுக்கு சந்தோஷம் தர) ஹோமரின் ஈலியாட் காவியத்தில் பல இடங்களில் எருதுகளும் காளைகளும் பலியாகின்றன. ஓடிஸியஸ் கீழுலகத்துக்குச் செல்ல, இரவில் குகையில் நிறைய பலி கொடுக்க வேண்டியிருக்கிறது.

பைபிளின் பழைய ஏற்பாட்டில் (ஜெனிஸிஸ் 22 வது அத்தியாயம்) கடவுள் அப்ரஹாமைத் தன் மகன் ஐசாக்கை பலி கொடுக்கும்படிக் கேட்கிறார். அப்ரஹாம் தயங்காமல் கடவுள் சொன்ன இடத்திற்குத் தன் மகனைக் கூட்டிச் சென்று அவனை வெட்டக் கத்தியெடுக்கும்போது, தேவன் அப்ரஹாமை அழைத்து, அவன் விசுவாசத்தை சிலாகித்து, 'உன்னைப் பரிசோதிக்கவே இந்த ஆணை தந்தேன். அவனைக் கொல்லாதே' என்று பணிக்கிறார். அப்ரஹாம் புதரில் மாட்டிக் கொண்ட ஓர் ஆட்டை பலி கொடுத்துவிட்டுத் திரும்புகிறார். (நம் புராணங்களிலும் இம்மாதிரிக் கதைகள் சில இருக்கின்றன - சிறுத் தொண்டர்)

பைபிளின் அந்தக் கால கட்டத்திற்குப் பின் உலகின் எந்த மதத்திலும் நரபலி இல்லை. யூதர்கள்தான் நரபலி தப்பு என்பதை முதலில் தீர்மானித்தார்கள் என்று நம்புகிறார்கள். கிறித்தவர்கள், நரபலி பழகவே இல்லை. அவர்கள் கொடுத்த ஒரே ஒரு பலி, மற்றவர்கள் வாழ்வதற்காகக் கொடுத்த மகத் தான பலி; தேவமகன்தான்.

ரோமன் கத்தோலிக்கர்கள் ஒயினையும் (ரத்தம்) ரொட்டியையும் (சதை) ஒவ்வொரு பிரார்த்தனையிலும் அர்ப்பணிப்பது இந்த மகா தியாகத்தின் குறியீடாகவே.

பௌத்தமும் இஸ்லாமும் ஆரம்பத்திலிருந்தே நரபலியை நிராகரித்தன.

இந்த நிராகரிப்பின் ஆரம்பங்கள் அப்ரஹாமின் கதைதான் என்று அறிஞர்கள் சொல்கிறார்கள்.

நரபலி அழிந்து போய் மிருகங்களுக்கு வந்து ஆடு, மாடு, கோழி, பூசணி, இளநீர், எலுமிச்சம்பழம் அளவுக்கு வந்து, அதன் பல்வேறு பிரிவுகளில் அறுகிக் கொண்டிருக்கிறது. நாகரிகத்தின் அடையாளங்கள்தாம். எல்லாமே நரபலி ஆரம்பங்களின் இறுதி வடிவங்கள்தாம்.

(மீண்டும் அடுத்த வாரம்)

8

முட்டைக்கோஸை செதுக்கித் தள்ளுகையில் மனம் முந்தைய இரவின் நிகழ்வுகளில் தோய்ந்து, லயித்தது. தானே வேறாகிப் போனது போல அதிசய உணர்வு கவிந்தது. செதுக்கிய கோஸ் இதழ்களின் குவியல் பார்வைக்குப் புலப்படாமல் குழம்பிக் குழம்பிப் போய்க் கொண்டிருந்தது.

"மன்னி...!" திடுமென்று குமாரின் குரல் சமையல்கட்டின் நுழைவாயிலில் கேட்கவும், முகம் வியந்து போனாள் சுகன்யா.

"என்னாச்சு?" அவள் வெட்கத்தைப் பார்த்துக் கேட்டான்.

"ஒண்ணுமில்லை..."

"காப்பி வேணுமே..."

சரஸ்வதியும் ராமநாதனும் அதிகாலையிலேயே கிளம்பி ஒரு கல்யாணத்துக்குப் போய் விட்டிருந்தார்கள். வசந்தி குளியலறையிலிருந்தாள். ஸ்ரீராம் இன்னும் எழுந்திருக்கவில்லை.

குமாருக்கு காப்பி தயாரிக்க பாலை அடுப்பில் வைத்துவிட்டு சுகன்யா கேட்டாள் :

"ரொம்ப சூடா வேணுமா...? மீடியமா இருந்தாப் போதுமா...?"

"சூடா வேணும்..."

"சர்க்கரை...?"

"இரண்டு ஸ்பூன். எனக்கு இரண்டு ஸ்பூன்; வசந்தின்னா ஒண்ணரை; ஸ்ரீராம், அம்மா இரண்டு பேரும் ஒரு ஸ்பூன்தான். அப்பாவுக்கு நோ ஷுகர். இதையெல்லாமும் நோட்லே எழுதிக் கொடுத்துடவா...?"

விளையாட்டாகப் பேசுகிறானா...? வலிக்கட்டும் என்று சொல்லால் அடிக்கிறானா...? புரிவதற்குள் பால் பொங்கியது. டிகாக்ஷன் சேர்த்து, சர்க்கரை கலக்கித் தந்தாள்.

"குமார்...!" - காப்பி தம்ளருடன் வாசல் பக்கம் போனவனைக் கூப்பிட்டாள்.

"இன்னைக்கு நான்தான் சமைக்கப் போறேன்... கத்தரிக்காய் குழம்பு, கோஸ் பொறியல்... உனக்குப் பிடிக்குமில்லையா...?"

"ஓ.கே! ஆனா அது பொறியல் இல்லை... கறி! நாங்க அப்படித்தான் சொல்லுவோம்..."

"கறி! கோஸ் கறி..." திருத்திக் கொண்டாள்.

"எதுக்கும் வசந்தியைக் கேட்டுக்கோங்க... எப்படிச் செய்யறதுன்னு... நீங்க பாட்டுக்கு வெங்காயத்தையும் தக்காளியையும் சேர்த்து வதக்கி வைச்சுடப் போறீங்க..." சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

முளைவிட்ட அலுப்பை விரட்ட முயன்றாள் சுகன்யா. கோஸ் பொறியல் என்ற அல்ப விஷயத்தைக் கூட முன் நிர்ணயித்த முறையில் தான் செய்ய வேண்டுமா? புதிய சுவைகளை முயன்று பார்க்கும் ரசனை இவர்களுக்கு வராதா...? புதிதாக எதையும் அணுகும் முன்னரே மறுப்பதற்குத் தயாராகி விடுகிறார்கள். புது மருமகள் உள்பட...! ஸ்ரீராம் எப்படி இந்தக் குடும்பத்தில் தப்பிப் பிறந்தான்...?

வசந்தி உதவியுடன், அவள் விளக்கிய முறையில் சமையலைச் செய்து முடித்தபோது ஸ்ரீராம் எழுந்து வந்தான்.

"சுகி..." சமையலறை வாசலில் நின்றபடி கூப்பிட்டவனைப் பார்த்ததும் கிளர்ந்தெழுந்த உணர்ச்சிகளை விழுங்கிக் கொண்டாள். காப்பியைப் பெற்றுக் கொண்டு "தாங்க்யூ" என்றான்.

"இன்னும் என்னென்னத்துக்கெல்லாம், எத்தனை முறை தாங்ஸ் சொல்லப் போறே...?" அடிக்குரலில் அவன் காதில் மட்டும் விழும்படிக் கேட்டாள்.

"எல்லாத்துக்கும் சேர்த்து அங்கே சொல்லிடறேன்" என்றான் பூஜை அறை இருந்த திக்கைக் காட்டி.

அப்போதுதான் காதலை உணர்ந்தவர்கள் போல் புதிதாக ஒரு சந்தோஷ ஊற்றுச் சுரந்தது இருவர் உள்ளத்திலும்.

ஆறு மாதங்கள் கடந்த பிறகும் அந்த ஊற்று அன்றாடம் புதுப் புனலாய்ச் சுரந்து கொண்டிருந்தது. திருமணமாகி முதல் முறையாக அலுவலகப் பணியில் ஸ்ரீராம் வெளியூர் போனபோது, மனசடைத்து துக்கம் சூழ்ந்தது.

"கல்யாணத்துக்கு வாங்கின கூரைப் புடைவையைக் கட்டிக்கணும்..." சரஸ்வதி சொல்லிவிட்டுப் பூஜையறைக்குள் போய் விட்டாள்.

அரக்குச் சிவப்பிலிருந்த பட்டைப் பிரித்து யோசித்தாள் சுகன்யா... முகூர்த்த சமயத்தில் பெரியத்தை, சித்தி என்று இரண்டு பேர் சேர்ந்து கொசுவியும் மடித்தும் நீவியும் இழுத்தும் இந்த ஒன்பது கஜத்தை இடுப்பில் ஏற்றி

?

**சிவசங்கரி**



விட்டார்கள். எப்படி ஆரம்பித்தார்கள்...? யோசிக்க, யோசிக்க, புரிபடவில்லை. வசந்தியைக் கூப்பிட்டுக் கேட்கலாமா...?

"ஐயோ! மன்னி... எனக்குத் தெரியாது. கல்யாணமானவா தானே மடிசார் உடுத்திக்கலாம்... இருங்கோ, அம்மாவை அனுப்பறேன்..."

சரஸ்வதி வந்து புடைவை உடுத்தக் கற்றுத் தந்த போது தான் சுகன்யாவுக்கு அது உறைத்தது.

கல்யாணமாகி வந்த இந்த ஆறு மாதங்களில் இப்போதுதான் மாமியார் இவ்வளவு அண்மையில் வந்திருக்கிறார். தவறியும் இதுவரை தன்னை அவர் தொட்டதில்லை. ஒருநாள் தலைவலி மிக அதிகமானபோது கூட, வசந்திதான் 'ஜுரம் அடிக்கிறதோ...?' என்று தொட்டுப் பார்த்தாள்.

இப்போது, வேகமாக அவர் கை செயல்படு

கையில், உழைத்து உரமேறிப் போன அவர் விரல்களின் சொறசொறப்பு பல கதைகளைச் சொல்வது போல் இருந்தது.

அந்தக் கைகளைப் பிடித்துக் கொண்டு எல்லா கதைகளையும் கேட்டால் என்ன...?

"ஊம்... இதை இடுப்புல செருகிக்கோ..." சுகன்யாவின் வலது தோளில் தலைப்பைப் போட்டு விட்டு, அதன் ஒரு முனையை எடுத்து அழகாக மடித்து நீட்டினாள் சரஸ்வதி!

"தேங்க்யூ அம்மா..."

ஒரு புன்னகையைக் கூட பதிலாக்காமல் "சீக்கிரம் வா... மாசம் பொறக்கற நேரமாச்சு" என்று போய் விட்டார் மாமியார்.

ஸ்ரீராம் பெங்களூர் போயிருப்பதால், மெல்லிய மஞ்சள் சரடை மாமியாரே கழுத்தில் கட்டிவிட, காரடையான் நோன்பு முடிந்ததும் நினைவாக மாமியார், மாமனாரை நிற்க வைத்து நமஸ்கரித்தாள் சுகன்யா.

வெற்றிலைப் பாக்கில் ஐம்பது ரூபாய் நோட்டு வைத்து நீட்டினார்கள்.

"இதெல்லாம் எதுக்கு...?"

"தலைநோன்பு இல்லையா...? எங்கள் ஆசிகள்..." சம்பிரதாயம் தவறிவிடக் கூடாது என்கிற அக்கறையைத் தவிர வேறெதையும் அந்த 'ஆசிகள்' உணர்த்தியதாகத் தோன்றவில்லை.

'ஸ்ரீராம் இருந்தாலாவது ஒரு பாட்டம் புலம்பித் தீர்க்கலாம். இன்னும் இருபத்திநாலு மணி நேரம் காத்திருக்க வேண்டும்...' சுகன்யாவின் ஏக்கம் பசியை விரட்டி விட்டது.

உணவு மறுத்தபோது, "சாஸ்திரம்...! இந்த அடையைச் சாப்பிட்டாகணும்... இலையில் உட்காரு" என்று வற்புறுத்தலாக வார்த்தைகள் வெளிப்பட்டன.

ஓரத்தில் வெண்ணெய், வெல்லமும் ஏலமும் மணக்கும் அடை... ஒரு விள்ளல் எடுத்துச் சாப்பிடும் சமயம் பார்த்து குமார் வந்தான்.

"மன்னி! இது சாவித்திரி பண்ணின நோன்பு... சத்யவான் உயிரை மீட்டுண்டு வர்றதுக்காகப் பண்ணினாளாம்... அந்த மாதிரி இப்போ எல்லா லேடீஸும் அவாவா கணவனோட தீர்க்க ஆயுள் வேண்டிப் பண்றது... கதை தெரியுமா உங்களுக்கு...?"

"தெரியும்..." கதை பேசும் உற்சாகத்துடன் தொடர்ந்தாள் சுகன்யா... "குமார்... ஒண்ணு கவனிச்சியா... நம்ம நாட்டுல ஒரு விரதமோ, பூஜையோ கூட பெண்டாட்டிக்காகப் புருஷன் பண்ற மாதிரி இருக்காது... எல்லாம்..."

"ஷ்...! அப்படியெல்லாம் பேசப்படாது...!" குமார் வாய் மேல் விரல் வைத்து, கண்களை உருட்டிச் சிரித்தான்.

"என்னடா...?" என்று கேட்டபடி சரஸ்வதி வந்தபோது டெலிபோன் ஒலித்து, சுகன்யாவைக் காப்பாற்றியது.

"மன்னி! உங்களுக்குத்தான் போன். அண்ணா ஆபீஸிலேருந்து ராஜு பேசறார்..."

அவசரமாய் எழுந்து போய் இடக்கரத்தால் ரிசீவரை வாங்கிப் பேசினாள்.

"சொல்லுங்க சார்... ஹவ் ஆர் யூ?"

"சௌக்யமா இருக்கேன்மா. ஸாரி! உன்னைக் கொஞ்சம் தொந்தரவு பண்ண வேண்டியிருக்கு... நீ நாளைக்கு ஆபீஸ் வந்துட்டுப் போகணுமே..."

## தங்க நகை பரிசு!

**இன்னும் 18 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக் கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?**

**வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள்.**

**உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகை பரிசு!**

**பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.**

"அந்தாளுகிட்ட போய் 'குடை' கேட்டது தப்பா போச்சு!"

"ஏன் கொடுக்கலையா?"

"ம்கூம், கொடுத்து 'மழையில நனைச்சுடாம கொண்டு வாங்க'ன்னு சொல்றாரு!"

– க. பாலசுப்பிரமணியன்





''செக்குல கையெழுத்து சரியா இல்லையே, மேடம்...?''

''புடைவை வாங்கறதுக்காக என் கணவர் கொடுத்ததுதான் சார்... பெரிய செலவுன்னாலே எப்பவும் அவருக்குக் கை நடுங்கும்!''

– சீர்காழி வி. ரேவதி

''உங்க தொகுதி எம்.எல்.ஏ. வந்து' என்ன கேட்டாரு...?''

''அவருடைய குறைகளை எல்லாம் சொல்லி ஆறுதல் கேட்டாரு!''

– பொன். குமார்



"என்ன விஷயம் சார்...?"

"புதுசா குவாலிடி கண்ட்ரோல் ஸாப்ட்வேர் ஸீரீஸ் பிளான் பண்ணியிருக்கோம்... அதுக்கு நல்ல அறிமுகம் எழுதணும்... உன் உதவி வேணுமே..."

"வரேன் சார்..."

போனை வைத்துவிட்டு அறிவித்தாள் : "நாளைக்கு ஆபீஸ் போகணும்..."

"ஸ்ரீராம் இல்லையே... அவனைக் கேட்க வேண்டாமா...?" மாமியார் கவலையுடன் பார்த்தார்.

"வந்த பிறகு சொல்லிக்கலாம் அம்மா..."

"நாளை ஒரு நாள்தானே...?"

"அப்படித்தான் நினைக்கிறேன். போனால் தெரியும்!"

"போயிட்டு வரட்டும் சச்சு... ஸ்ரீராம் ஒண்ணும் சொல்ல மாட்டான்..." என்ற மாமனாரைப் பார்த்து "தாங்க் யூ அப்பா..." என்றாள்.

ராஜு இரண்டு கைகளையும் நீட்டி, "சுகி! How good to see you!" என்று வரவேற்றார்.

சுகன்யா அவர் கையைப்பற்றினாள். பழைய உற்சாகம் தணிந்து விட்டது. ராஜுவுக்கு நொடியில் புரிய, ஆழமாகப் பார்த்தார்...

"என்ன சுகி! ஏதாவது பிரச்னையா...?"

"நத்திங் சார்! ஒண்ணுமில்லை..."

"சரி வா... வேலையை முதல்ல முடிப்போம். அப்புறம் பேசலாம்..."

மதியம் மூன்று மணிக்குள் இரு தரப்பினருக்கும் திருப்தி தரக்கூடிய அறிமுகம் தயாராகி விட்டது. புதிய சாஃப்ட்வேர் உதவியுடன் எப்படியெல்லாம் தரக்கட்டுப்பாட்டைச் சொடக்குப் போட்டு வசப்படுத்திக் கொள்ளலாம் என்று பிரமிப்பூட்டும் ஓர் அறிக்கை எழுதி முடித்திருந்தாள் சுகன்யா.

''ஸாரி சுகி! ஸ்ரீராம் இருந்திருந்தா உன்னைத் தொந்தரவு பண்ணியிருக்க மாட்டேன். அவனே இதை முடிச்சுருப்பான்..."

"பரவாயில்லை சார்... எனக்கும் ஒரு நல்ல மாறுதல்..."

"நீ வேலையை விட்டிருக்க வேண்டாம் சுகி..."

"இல்ல சார்... தொடர்ந்து வேலை பார்த்திருந்தால் ரொம்பக் கஷ்டமா போயிருக்கும்... இருபத்து நாலு மணி நேரமும் கூடவே இருக்கறதுனாலதான் என் குடும்பத்தைப் பத்தின சின்னச் சின்ன விஷயங்களையெல்லாம் தெரிஞ்சிக்க முடியறது... அந்தச் சின்ன விஷயங்கள் ரொம்ப முக்கியமாவும் இருக்கு..."

''கங்கிராட்ஸ் சுகி! எங்க குடும்பம்னு சொன்னே பார்த்தியா... அந்த வார்த்தையே உன்னோட வெற்றிக்கு அடையாளம்தான்..."

"இன்னும் நான் முழுசா வெற்றி அடையல சார்... ஐம்பது பர்சன்ட் ஜெயிச்சிருக்கேன். அனேகமா எங்க முதல் வெட்டிங் ஆனி வர்ஸரிக்கு அது நூறு பர்சன்ட் ஆயிடும்..."

சந்தோஷத்துடன் அனுப்பி வைத்தார் ராஜு. அறிவார்த்தமாக சற்று இயங்கிய திருப்தியில் அதைவிட சந்தோஷமாக இருந்தாள் சுகன்யா. ஆட்டோவிலிருந்து இறங்கி, திரும்பவும் வீட்டுக்குள் நுழையும் வரை.

(தொடரும்)

# கடலோரக் கொலைகள் 8

படம் : சசி

கதை : பெஸிட் டோருமார்


















மண்டபத்தில் அடிக்கடி படுப்பவர் பட்டியல் தயாரித்தார் மதிவாணன்...

விசாலம்! பரமகுரு செத்த அன்னிக்கு நீயும் மாணிக்கமும் அங்க படுத்திருந்தீங் கல்ல! உண்மையைச் சொன்னா எலும்பு நொறுங்காது!

மாணிக்கம்தான் பரமகுரு கிட்ட பேசிட்டிருந்தான். நான் தூங்கிட்டேன்.

என்னை ஒண்ணும் பண்ணாதீங்க. நடந்ததை சொல்லிடறேன்...

...பரமகுரு ஒருமணி சுமாருக்கு மண்டபத்துக்கு வந்தான். குடிச்சிருந்தான்; ஆனா போதை ஏறல. தூங்காம பெண்டாட்டியை திட்டிக்கிட்டிருந்தான். இன்னும் சரக்கு போடக் கடன் கேட்டான். என்கிட்ட பைசா இல்லே....

...இரண்டு மணி இருக்கும். சரக்கு ஞாபகமாவே இருந்தவன், பண்ணை வீடு போய் பணம் வாங்கிட்டு வரேன்னு நடந்தான்.

அப்படியா, சரி. விசாரணை முடியற வரை லாக்-அப்ல இருங்க.

இன்ஸ்பெக்டர் கோபியிடம் மதிவாணன்...

ரெண்டுமணிக்கு படுத்துட்டதா பிரதீப் சொன்னாரு. அதே நேரம் பண்ணை வீடு கதவைத் தட்ட பரமகுரு போனதா மாணிக்கம் சொல்றான். யாரை நம்புறது?

நாளைக்கு தட்டிக் கேட்போம்.

(தொடரும்)







ஆஹ்... ஹாஹ்ஹா...




இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்




• ராமதாஸ்

# கனடாவில் கப்பலேறிய தமிழர் மானம்!

## உபயம் : டாக்டர் ராமதாஸ்!

கனடாவின் தலைநகரான டொராண்டோ நகரமே தமிழால் குளிப்பாட்டப்பட்டது. ஆம்; கடந்த மாதம் 24, 25, 26 தேதிகளில் இங்கு நடந்த ஆறாவது உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டைத்தான் சொல்கிறோம்.

நீலவண்ண தேவதைகளாக கனடா பல்கலைக் கழகத் தமிழ் மாணவிகள், வேஷ்டி - ஜிப்பாவில் மாணவர்கள், தமிழறிஞர்கள் என்று பலரும் நாதஸ்வரம் முழங்க வீதிகளில் ஊர்வலமாக வந்தபோது நகரமே வியந்து பார்த்தது. தஞ்சைத் தமிழ் மாநாட்டில் கலந்து கொள்ள அனுமதிக்காததால் திரும்பிச் சென்றாரே, யாழ்ப்பாணப் பேராசிரியர் கா. சிவத்தம்பி, அவர்தான் இந்த மாநாட்டைக் குத்து விளக்கேற்றித் துவங்கி வைத்தார். 'உலகப் பண்பாட்டிற்குத் தமிழரின் பங்களிப்பு' என்னும் தலைப்பில் மிகச் சிறந்த உரையுமாற்றி, மாநாட்டின் தரத்தைப் பல படிகள் உயர்த்தினார்.

கவிஞர் நிர்மலா சுரேஷ், தமது டெலிபோன் சிநேகிதியான 28 வயது ஜப்பானியப் பெண் யூமிகோவை வரவழைத்து மாநாட்டு மேடையேற்றியபோது, அவரிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்குத் தமிழிலேயே பதில் சொல்லி அசத்தினார்.

"86-ம் ஆண்டில் டோக்கியோ பேராசிரியர் ஒருவரிடம் ஐந்து வாரங்கள் தமிழ் கற்றேன். அதன் பிறகு நானே தொடர்ந்து பயிற்சி செய்தேன். இப்போது மானுடவியல் படிக்கிறேன். அதனால் கோயம்புத்தூரிலுள்ள ஒரு கிராமத்துக்குச் சென்று சில மாதங்கள் தங்கினேன். புடைவை கட்டி, பொட்டு வைத்து, பூச்சூடத்தான் எனக்கு மிகுந்த ஆசை என்று 28 வயது ஜப்பானியப் பெண் யூமிகா சொன்னபோது அரங்கமே கைதட்டலில் அதிர்ந்தது.

இதே போல் டைரக்டர் பாரதிராஜாவின் 'கேள்வி-பதில்' நிகழ்ச்சிக்கும் ஏகப்பட்ட வரவேற்பு. "தமிழனைப் பெருமைப்பட வைக்கும் டைரக்டர்" என்று அனைவராலும் போற்றப்பட்டார்.

ஆனாலும் ஒரு திருஷ்டிப் பரிகாரம் வேண்டாமா? அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர் பாட்டாளி மக்கள் கட்சியின் நிறுவனர் டாக்டர் ராமதாஸ்!

தாம் ஒரு பார்வையாளராக இந்த மாநாட்டில் கலந்து கொள்ள விரும்புவதாக, மாநாட்டு அமைப்பாளரிடம் அவர் தெரிவித்தபோது, சந்தோஷத்தோடு ஒப்புக் கொண்டு அழைப்பு அனுப்பினார்கள். வந்தவர் பேச விரும்பியபோது, 'அரசியல் ஏதும் பேச வேண்டாம்' என்கிற வேண்டுகோளோடு

அவரை மேடையேற்றினார்கள். அப்படியும் அவர் கேட்கவில்லை. அவர் பேசிய அரை மணி நேரமும் அநாகரிகமாகத்தான் பேசினார். உதாரணத்திற்குச் சில துளிகள் :

• தமிழ்நாட்டு மக்கள் தினம் தினம் முட்டாளாகிக் கொண்டிருக்கிறார்கள்.

• தமிழ்நாட்டைத் தாயகம் என்று மூன்று நாட்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே, தமிழ்நாடு தாயகமா? தீரன் சொல்கிறார்... 'யாழ்ப்பாணத்திலிருந்துதான் ஆதிகாலத்தில் தமிழகத்துக்கே தமிழன் வந்திருக்க வேண்டும்' என்று. அதுதான் சரி!

• ஈழத்தமிழர்கள் தமிழ்நாட்டில் பிச்சைக்காரர்களைப் போல் நடத்தப்படுகிறார்கள். தமிழ்நாட்டுக்காரர்களோ, பிச்சைக்காரர்களை விடக் கேவலமானவர்கள்.

• தமிழ்நாட்டில் பேச்சிலும் தமிழ் இல்லை; மூச்சிலும் தமிழ் இல்லை. அறவாணன், வா.மு. சேதுராமன், இரா. ஜனார்த்தனம் ஆகியோர் இல்லாவிட்டால் தமிழ்நாட்டில் தமிழே இருக்காது.

• எங்கள் நாட்டில் இயல் பாகத் தலைவர்கள் உருவாக முடியாது. பத்திரிகைகள்தான் அவர்களை உருவாக்கும்.

• நாட்டில் சுவருக்குப் பஞ்சம்; பெயின்டுக்குப் பஞ்சம்... அரசியல்வாதிகளின் முகங்களை வரைந்து வரைந்து!

• எங்கள் பத்திரிகைகள் தமிழில் வெளிவந்தாலும் தமிழனுக்கும் தமிழுக்கும் எதிரானவை.

• எங்கள் நாட்டில் நடக்கும் ஆராய்ச்சியெல்லாம் 'ரவிக்கைக்குள் என்ன?' 'சமைஞ்சது எப்படி?' என்பதைப் பற்றித்தான்.

• ஈழத்தமிழர்கள் மட்டுமா விடியலைத் தேடுகிறார்கள்? நாங்களும்தான் தேடிக் கொண்டிருக்கிறோம்.

கனடாவில் புலி ஆதரவாளர்கள் பலர் உள்ளனர்; மறுக்கவில்லை. அவர்களிடையே ராமதாஸ் எதுவும் பேசட்டும்; ஆனால் எந்த இடத்தில் எதைப் பேசவேண்டும் என்பதில்லையா? ராமதாஸின் இந்தப் பேச்சை மாநாட்டுக்கு வந்திருந்த ஈழத் தமிழர்கள் கூட ரசிக்கவில்லை. விமர்சனம்தான் செய்தார்கள். ராமதாஸோடு அரங்கிற்குள் நுழைந்த பத்துப் பேரும் விடுதலைப் புலிகள் என்று கருதப்பட்டதால், கனடா நாட்டின் உளவுத் துறையினர் மிகுந்த கவனத்தோடு அனைவரின் பேச்சையும் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்கள்!

கனடாவிலிருந்து :

**'துருவத்தமிழன்'**



• பாரதிராஜாவுடன் கேள்வி-பதில்

• டொராண்டோ வீதிகளில் நாதசுரம், மேளம்!

## தில்லி நியூஸ்

# சர்மாவைத் தொடலாமா?

அம்பேத்கர் வாழ்க்கை ஏழு கோடி ரூபாய் செலவில் படமாகிறது. என்.எஃப்.டி.சி. தயாரிக்கிற இந்த இந்தி - ஆங்கிலப் படத்தில் டாக்டர் அம்பேத்கராக நடிப்பவர் - மம்முட்டி.

ஜப்பார் படேல் இயக்கத்துக்குப் பதில் ஷ்யாம் பெனகல்லைப் போட வேண்டும் என்று அம்பேத்கரின் மனைவி சொல்லி விட்டார். எனவே ஷியாம் பெனகல் படத்தில் கன்சல்டன்ட். இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அம்பேத்கர் படித்த இடங்கள் படமாக்கப்பட, படப்பிடிப்புத் துவங்கி விட்டது!

● ஜனதா கட்சித் தலைவர் சுப்பிரமணியம் சுவாமி, அண்மையில் கன்ஷிராமைச் சந்திக்க அவர் வீட்டுக்குப் போனார். ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரியுடன் பேசிக் கொண்டிருந்தார் கன்ஷிராம். கொஞ்ச நேரம் நின்று பார்த்தார் சுவாமி. பிறகு வெளியே வந்து புல்வெளியில் உலாத்தினார். பிறகு தமது காரில் உட்கார்ந்து, காத்திருந்தார். கன்ஷிராம் கூப்பிடுகிற வழியாய் இல்லை. கடைசியில் உள்ளே இருந்து செய்தி வந்தது : 'அப்புறம் எப்போதாவது சாவகாசமாகப் பார்க்கலாமே?' என்று. சுவாமி கடுப்பாகித் திரும்பிப் போய் விட்டார்.

● பிரதமர் தேவகௌடா தீவிர கடவுள் பக்தர் மட்டுமல்ல. சில விரதப் பழக்கங்களும் அவருக்கு உண்டாம். திங்கள் முழுதும் பட்டினி இருப்பார் தேவகௌடா. (அவரது பெற்றோர் இறந்த நாள் திங்கள் கிழமைதான்.) ஆனால் அசாத்திய வேலை கெடுபிடி காரணமாக, சுறுசுறுப்பாக இருக்க முடியவில்லை. டாக்டர்கள் 'நீங்கள் சோர்ந்து போகாமல் இருப்பதற்கு ஏதானும் ஜூஸ் குடித்தால்தான் நல்லது' என்று சொல்லி விட்டார்கள்!

● சி.பி.ஐ. இயக்குநர் ஜோகிந்தர் சிங்குக்கு, அவர் பதவி வேறு எதற்குப் பயன்படுகிறதோ இல்லையோ, அவர் எழுதிய சுயமுன்னேற்றப் புத்தகங்கள் விற்க வெகுவாக உதவுகின்றது. இப்போது ஒரு குட்டி நாவல் வேறு எழுதிக் கொண்டிருக்கிறாராம். அவரது சுயமுன்னேற்றப் புத்தகங்களை, பொதுத்துறை நிறுவனங்களும், தேசியமயமாக்கப் பட்ட வங்கிகளும் போட்டி போட்டுக் கொண்டு வாங்குகின்றன.

● அத்வானியின் தலைமைக்குப் பதிலாக, யாரைப் போடுவது என்று பி.ஜே.பி. தலையைக் குடைந்து கொண்டிருக்கிறது. இரண்டாவது 'டெர்ம்' முடிந்துவிட்டது அத்வானிஜிக்கு. கோவிந்தாசார்யா, கல்யாண்சிங், பிரமோத் மகாஜன் மூவர் பெயரும் அடிபடுகிறது.

● அர்ஜுனா விருது வழங்கும்போது மேடை ஏற, குடியரசுத் தலைவர் சர்மா சற்றுத் தடுமாறியபோது, ஓடிப் போய்ப் பிடித்துக் கொண்டார் அமைச்சர் தனுஷ்கோடி ஆதித்தன். சர்மாவின் பாதுகாவலர் அவசர அவசரமாக ஓடிவந்து அமைச்சரைத் தடுத்தாராம். குடியரசுத் தலைவரைத் தொடவே கூடாதாம்!

- நியூஸ்வாலா



• மம்முட்டி : அம்பேத்கர் ஆகிறார்

• தனுஷ்கோடி ஆதித்தன் : தொட்டால் தப்பு



• கௌடா : விரதம்



• சு. சுவாமி : மூக்குடைப்பு





# மேட்டுக்குடி

எடுத்த உடனே, 'ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு' என்று லெட்டரிங் ஓடுகிறது. ராஜராஜ சோழன் சண்டை போட்டதைக் காண்பித்து, இது ஏதடா சப்தம் போடாமல் சரித்திரப் படம் எடுத்திருக்கிறார்களோ என்று ஒருகணம் திகைக்க வைத்து விடுகிறார்கள்.

அப்புறம் அந்தப் போரில் ஜெயித்ததற்காக, மன்னர் தம் தளபதிக்கு ஒரு வீரவாள் பரிசளித்ததாகவும் அது வம்சம் வம்சமாகப் பாதுகாக்கப்படுவதாகவும் அதைத் திருட ஒரு கோஷ்டி கி.பி. 1996ல் கிளம்புவதாகவும் தொடர்ந்து, நக்மாவின் குளியலறையில் போய் நிற்கிறார்கள். வாளைத் திருட வருகிறவன் நக்மாவின் மனசைத் திருடிவிட, அப்புறம் நடக்கிறவற்றை விளக்கவும் வேண்டுமா?

எம்.ஜி.ஆர். பார்முலா, ரஜினி பார்முலா என்பது போல சுந்தர். சி. தனக்கொரு பார்முலா பண்ணிக் கொண்டிருக்கிறார். அதைவிட்டு சென்ட்டிமீட்டர் கூட நகராமல் ஒரே ஆட்டத்தை விதம் விதமாக ஆடுகிறார்.

பெரிய சைஸ் குடும்பம் ஒன்று. அதனுள்ளே பிரச்னைகள். வில்லன் கோஷ்டி. எங்கிருந்தோ வரும் ஹீரோ. உப்புக்கு மணிவண்ணன். உறைப்புக்கு கவுண்டமணி. கூடுதலாக இதில் ஒரு ஜெமினி கணேசன்.

படத்தில் உன்னதமான ஒரே விஷயம் ஜெமினியின் நடிப்பு. இத்தனை வயசுக்கப்புறம், சுருக்கங்கள் விழுந்த அந்த முகத்தில் எந்தவித பாவமும் அநாயாசமாக வந்து விழுவதை வியக்காமல் இருக்க முடியாது. கார்த்திக், நிஜமாகவே தன் பேரனல்ல; திருட வந்தவன் என்று தெரியவரும்போது வசனமே இல்லாமல் ஒருகணம் - ஒரே ஒருகணம் - அந்தக் கண்கள் கொஞ்சம் சுருங்கி விரிகிறது பாருங்கள்... அடேங்கப்பா!

ஒரு பக்கம் ஜெமினியும் நடிப்பில் அவருக்குப் போட்டியாக திலகனும் வெளுத்து வாங்கிக் கொண்டிருக்க, மறுபக்கம் கவர்ச்சிக்காகவே நக்மா. படம் முழுக்கக் குளிப்பதிலும் புடைவை மாற்றுவதிலுமே கவனமாக இருக்கிறார். போரடிக்கிற போது மட்டும் கிளி மூக்கில் கடிதம் செருகி கார்த்திக்குக்கு அனுப்பிவிட்டு 'தூது போ' என்று நாற்பதுகளின் இறுதிக் கதாநாயகிகள் போலப் பாடுகிறார்.

கமர்ஷியலாக ஒரு படம் ஓடக்கூடியதற்கான அத்தனை சாமக்கிரியைகளும் செய்யப்பட்டிருப்பினும் குறிப்பிட்ட எந்த ஒரு சம்பவமோ, காட்சியோ மனசில் ஒட்டாமைக்கு இரண்டு காரணங்கள் தெரிகின்றன :

அந்த ராஜராஜசோழன், வாள் சமாசாரமெல்லாம் கொஞ்சமும் நம்பக்கூடியதாக இல்லை. பெரிய சைஸ் பூப்பந்தல்.

இரண்டாவது, எடிட்டருக்குக் கத்தரிக்கோல் அலர்ஜியோ என்னமோ. காட்சிகளை, இஷ்டத்துக்கு நீளமாக விட்டிருக்கிறார். நடுவில் எழுந்து போய், பக்கத்து தியேட்டர் வாசலில் ஸ்டில் பார்த்துவிட்டு வந்து உட்கார்ந்தாலும் எழுந்து போன போது பார்த்ததையே பார்க்கிறபடி இருக்கிறது. அநியாயத் தொய்வு.

- ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# நவராத்திரியை முன்னிட்டு எங்கள் விசேஷ சேமிப்பு திட்டம்

# சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

# EXPRESS

FINANCIAL EXCHANGE LIMITED

## பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் **அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்** டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்வேவ் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எழுது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Helios & Mathison

Registered with the Registrar of Newspaper of India under No. 10411/57 * Registered No. TN/MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka